உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப் பத்திரிகை.

"எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.

தொகுதி-௩௰] ஆங்கிரஸ வரு புரட்டாசிமீ [பகுதி-௧௧.
Vol. XXX September-October-1932. No. 11.

உள்ளுறை.



பத்திராசிரியர்—திரு. நாராயணையங்கார்.

வருஷம் ஒன்றுக்கு ரூ 4.] [தனிப்பிரதி அணா—௮.
வெளிநாடுகளுக்கு ரூ 4—8—0.

1932.

Printed by Srimathu Raja M. Dinakara Bahadur Avl., and published by Thiru. Narayana Iyengar, at the Tamil Sangam Power Press, No. 54, New Jail Road Madura.

# ஒரு வேண்டுகோள்.

---

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதமொருமுறை வெளிவரும் இச்செந்தமிழ்ப்பத்திரிகையில் வெளியிடுமாறு பொருளுரைகளும், மதிப்புரைவேண்டிப் புத்தகம் முதலியனவும் அனுப்புவோர் அவற்றைப் பத்திராதிபர், செந்தமிழ், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும்,

செந்தமிழில் வெளியிடுமாறு அனுப்பும் விளம்பரங்களையும் பாண்டியன்புத்தகசாலைக்கு நன்கொடையாக அனுப்பும் புத்தகம் முதலியவைகளையும், செந்தமிழ் செந்தமிழ்ப்பிரசுரங்கள் தமிழ்ச்சங்க பிரசுரங்கள் சங்கக்கலாசாலை சங்கப்பரீக்ஷைகள் முதலியவைசம்பந் மாக அனுப்பும் கடிதங்கள் மணியார்டர்கள் முதலியவற்றையும் இன்னும் இச்சங்கசம்பந்தமாயறியவிரும்பியெழுதும் பிறவற்றையு மானேஜர், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டு அனுப்புமாறு இதன்மூலம் கேட்டுக்கொள்ளலாயிற்று.

மதுரைத்தமிழ்ச்சங்கம்,<br>மதுரை.

லக்ஷ்மீநாராயணையர்,<br>மானேஜ

---

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-௩௰] ஆங்கிரஸ ஹு புரட்டாசி மீ [பகுதி-௧௧.

Vol. XXX. September-October-1932. No. 11.

## கம்ப ராமாயண இன்கவித்திரட்டு.

ஸ்ரீமத். ராவ்ஸாஹிப்-வெ.ப. சுப்பிரமணியமுதலியாரவர்கள் எழுதுவது.

[௬௯-ம் பக்கத் தொடர்ச்சி.]

### கார்காலப் படலம்.

[சீதை பிரிந்தபின் வந்த கார்காலத்தை இராமன் எவ்வாறு கழித்தானென்பதைக் கூறுவது. ஆறு பருவங்களும், வெயிற்காலம் மழைக்காலம் பனிக்காலம் என்று பகுக்கும்போது மூன்றுள் அடங்குதலால், வர்ஷருதுவும் (—ஆவணி புரட்டாதியாகிய கார்ப் பருவமும்) சரத்ருதுவும் (—ஐப்பசி கார்த்திகையாகிய கூதிர்ப் பருவமும்) ஆகிய நான்கு மாதங்களையுமே கார்காலமென்றுகொண்டு படலத்துக்குப்பெயரமைத்தனரென்றல் தகுதி; "மழைக்காலத்திற்கு வேண்டுபவற்றிற்காக மற்றையெட்டுமாதங்களில் முயலவேண்டும்" என்னும் பொருளுள்ள வடமொழி மேற்கோள் இங்குக் கருதத்தக்கது. புத்தசன்னியாசிகள் கார்கால முழுதும் ஓரிடத்தில் தங்கியிருந்து, எஞ்சிய எட்டுமாதங்களிலும் ஜனங்களுக்குத் தர்மோபதேசம்செய்யும்பொருட்டுத் தேசசஞ்சாரம் செய்துவந்தனரென்பது புத்தசரித்திரங்களிற் கூறப்படுகின்றது. பொருள்தேடப் பிரிந்து அயல்நாடுசென்ற காதலன்வரவை முயற்சிக்கினையாத கார்காலத்துவக்கத்தில் காதலி எதிர்பார்த்திருப்பது, 'கார் முந்துத் தேர்மூர்தல்' என்ற துறையில் வருணிக்கப்படுவது. இவ்வாறாகக் கார்காலம், முயற்சிக்கேற்ற காலமல்லவென்பது தெளிவாம். ஆதலால், சீதையைத் தேடும் முயற்சிசெய்தற்குக் கார்காலம் கழிந்தவுடன் சுக்கிரீவன் சேனையோடு வரவேண்டுமென்று இராமன் பணித்தது இங்கே நினைவுகூரத்தக்கது.

## தட்சிணாயன ஆரம்பத்திற் கார்காலம் துவங்கல்.

சீதையைத் தேடுதற்குத் தென்திசைசென்ற அநுமானுக்கு முந்திச்சென்ற தூதன்போலச், சூரியன் தெற்குநோக்கிச்செல்லும் தெட்சிணாயனம் ஆரம்பமானபோது, கார்காலம் துவங்கியது.*]

## கார்மேகக் காட்சி.

498 பையணைப் பஃறலைப் பாந்த ளேந்திய
மொய்ந்நிலத் தகளியின் முழங்கு நீர்நெயின்
வெய்யவன் விளக்கமா மேருப் பொன்திரி
மையடுத் தொத்தது மழைத்த வானமே.

இ-ள். சூரியன், பூமியாகிய அகலில் (வார்த்த) சமுத்திரசலமாகிய நெய்யில் (இட்ட, மேருகிரி யென்னும் பொன்மலையாகிய திரியில்ஏற்றிய) தீபமாக, மேகத்தை (த் தன் அகத்தே) யுடைய ஆகாயம், (அந்த) மேருவாகிய பொன்திரி (எரியும் புகை) யால் கறுப்படைந்தாற்போன்றது. (நீல நிறமுடைய ஆகாயம் கார்மேகத்தால் கரியநிறமானதென்றபடி.)

பை—படம். அணை—படுக்கை. பாந்தள்—பாம்பு. பை அணை பல் தலை பாந்தள்—(திருமால் படுக்கும்) பாயாகிய, படமுடைய பலதலைகளையுடைய பாம்பு (ஆகிய ஆதிசேடன்). மொய் நிலம் தகளி—வலிமையுடைய பூமியாகிய அகல். அகல், தகளி, தகழி, இடிஞ்சில் என்பவை ஒரு பொருட்சொற்கள். நீர்—கடல். நெய்யின் என்பது நெயின் எனத் தொக்கது. வெய்யவன்—சூரியன். விளக்கம்—விளக்கு—தீபம். மை—கருமை—கறுப்பு. மை அடுத்தல்—கறுப்புநிறம்பொருந்தல். மையடுத்தால் ஒத்தது அல்லது மை அடுத்தது ஒத்தது, என்பது மையடுத்தொத்தெனத் தொக்கது. மழை—மேகம். மழைத்த வானம்—மேகத்தையுடைய ஆகாயம் மழைத்தவானம் என்பதற்கு 'மழையையுட்கொண்ட மேகம்' என்பது முந்திய உரை. மையெடுத்தொத்தது, மையகலாதது என்பனவும் பாடங்கள்.

மாதர் கண்ணுக்கிடும் மை கூட்டுதற்கு அடுப்புக்கட்டி மண் கலசத்தை மேலேவைத்து எண்ணெயும் திரியுமிட்ட அகல் அல்லது கைவிளக்கைக் கீழே வைத்து ஏற்றும் தீபம் எரியும்போதுண்டாம்

---

*அநுமானுக்குக் கல்வி கற்பித்த ஆசாரியனான சூரியன், அவனுக்குச் சீதையைத்தேட வழிகற்பிப்பான்போலத் தென்திசைநோக்கிச் செல்வானானன் என்னலாம்.

புகையிலுள்ள கரித்தூளின் திரள்பற்றிக் கலசத்தூர் கறுப்புறல் 'மையடுத்து' என்பதனாற் குறிக்கப்பட்டதாகக் கொள்க.

அகல் பூமிக்கும் நெய் கடலுக்கும் திரி மேருவுக்கும் தீபச்சுடர் சூரியனுக்கும் (கலசத்தூர் வானத்துக்கும் அந்தத்தூரிற்பற்றிப்படர்ந்த) புகையிலுள்ளகரித்தூட்பரப்பு வானத்திற்பரந்தமேகப்பரப்புக்குமுவமை.

அங்கை யளவான அகல், சிறங்கை யளவான நெய், அங்கைமோதிர வளைய அளவான திரி, அங்கை விர லளவான தீபச்சுடர், மீண்டும் அங்கை அளவான கலசத்தூர், அவ் அளவேயான கரித்தூட் பரப்பு ஆகிய செயற்கையாகத் தொடர்புபடுத்தப்பட்ட சின்னஞ்சிறிய பொருள்களை, முறையே அகண்டபூமண்டலம் பெரியசமுத்திரம் மகாமேரு சூரியன் வானம் மேகமாகிய இயற்கையாகத் தொடர்புடைய பென்னம் பெரிய பொருள்களுக்கு உவமையாக எடுத்தாண்ட கவித்திறம் கண்டு களிக்கத்தக்கது.

### வானம் இருண்டமை.

499 நஞ்சினின் நளிர்நெடுங் கடலின் நங்கையர்
அஞ்சன நயனத்தின் அவிழ்ந்த கூந்தலின்
வஞ்சனை அரக்கர்தம் வடிவின் செய்கையின்
நெஞ்சினின் இருண்டது நீல வானமே.

இ-ள். நீல நிறமுடைய ஆகாயமானது, விஷம்போலவும் கடல் போலவும் மாதர்களது மை (தீட்டிய) விழிபோலவும் அவர்களது அவிழ்ந்த தலைமயிர்போலவும் இராக்கதருடைய தேகம்போலவும் அவர்கள் செய்கைபோலவும் அவர்கள் சித்தம்போலவும் இருண்டது.

நஞ்சுபோல நெஞ்சுபோல என்று பொருள்படும் நஞ்சினின் நெஞ்சினின் என்பவைகளில் முதல் இன் சாரியை. இப்பாட்டில்வரும் மற்றெல்லா இன்னும் ஒப்புப்பொருள் உள்ள ஐந்தன் உருபு. நளிர்—குளிர்.

இயல்பாக நீலநிறமுள்ள வானம், கார்மேகம் பரவியதனால், கரிய நிறமானதென்பார், நீலவானம் இருண்டதென்றார். மாதர் கண்ணும் கூந்தலும் கருநிறத்தால் மேகத்துக்கு உவமை. கருமையை மிகுவித்துக்காட்ட அஞ்சனநயன மென்றும் மேகம் பரந்ததை விளக்க அவிழ்ந்த கூந்தலென்றும் அடைகொடுத்தார்.

'தீவினையைக் கருநிறமுடையதென்றல் கவிமரபு; ஆதலால், அரக்கர்தம்செய்கை, இருட்சிக்கு உவமையாயிற்று. அவர்களுடைய மனம் அஞ்ஞானமாகிய இருளினாலும் தீய சிந்தனைகளாலும் கறுத்

திருத்தலால் அதனையும் உவமானமாக்கினர்; "அகங்குன்றி மூக்கிற் கரியார்" என்ற திருக்குறளும், "மங்கை பங்கன் சிற்றம்பலம் ஆதரியார், கூழின் மலிமனம் போன்றிருளாநின்ற கோகிலமே" என்ற திருக்கோவையாரும் நோக்கத்தக்கன'.

## மின்னலும், இடியும், வாடையும், மழையும்.

[விண்ணில் மேகங்கள் மின்னுதல், போர்க்களத்தில் வெட்டுண்ட யானைகளின் புண்கள் திறத்தல்போன்றது.

அம் மின்னல்கள் பல பக்கங்களிலிருந்தும் மின்னுதல், திசைகள் சிரித்தல் நிகர்த்தது.

கார்காலமாகிய கொல்லன் வானமாகிய உலையில் மேகமாகிய கரியைப் பெய்து வாடையாகிய துருத்திக்காற்றால் பெருக்கிய தீச்சுவாலைபோல, மின்னல்கள் வீசின. (உலையிலிருந்து சுவாலைகள் குப்புக்குப்பென வெளிப்படல்போல, வானத்தினின்று மின்னல்கள் அடுத்தடுத்து வெளிப்பட்டன என்றபடி.)

படைவீரர் வாள்வீச்சுப்போல மின்னல்கள் வீசுதலாலும் படைமுரசு முழங்குதல்போல இடி இடித்தலாலும் சரராசி எய்தல்போல மழைமாரி பெய்தலாலும் ஆகாயம் போர்க்களம் ஒத்தது.

'இராமன், சுக்கிரீவாதி வானரருடன் சேர்ந்துவிட்டான். இனி, இராவணாதியிராக்கதர் இறவாதொழியார்.' என்ற உவகைமேலீட்டால் வானவர் *தூசு வீசுதல்போல, வானமானது, மின்னி, அவர்கள் ஆவாரித்தல்போல இடித்து, அவர்கள் மலர்மாரிசொரிதல்போல மழைமாரி பெய்தது.

## மழைபெய்ததன் பயன்.

கார்காலம் வர, அதனோடு, பொருள்தேடப்பிரிந்த காதலர் வந்ததனால், பிரிவுக்காலத்து வாடிப் பொலிவற்றிருந்தமாதர் தழைத்து (—பூரித்து)ப் பொலிவுறுதல்போல, மழையில்லாமல் வாடியிருந்த மரக்கொம்புகள் தளிர்த்துச் செழிப்புற்றன.

பூமி எங்கும் பசும்புல் முளைத்தது; வேனிற்காலமாகிய கொடுங்கோலரசனொழியக் கார்காலமாகிய செங்கோலரசன் வந்ததனால் பூமிதேவி மயிர்க்கூச்செறிந்ததுபோல விளங்கியது.] (தொடரும்.)

---

* தூசு—வஸ்திரம், வெள்ளை வீசல், வேட்டி வீசல் எனல் உலகவழக்கு.

உ

# ‘நாம்’ என்னும் உரிச்சொல்.

“பேநா முருமென வரூஉங் கிளவி
யாமுறை மூன்று மச்சப் பொருள.”

என்பது தொல்காப்பிய வுரிச்சொல்லியற்சூத்திரம்.

இதன் பொருள்: பேம், நாம், உரும் என்று சொல்லவருகின்ற அம்முறையினையுடைய மூன்றும் அச்சமாகிய குறிப்புணர்த்தும் என்பதாம்.

இம்மூன்று சொற்களுள், பேம் என்பதும் உரும் என்பதும் அச்சப்பொருளில்வந்ததற்குதாரணமாக, முறையே “பேமுதிர்கடவுள்” “உருமில்சுற்றம்” என்பன நச்சினார்க்கினியருரைப்பதிப்பிலும், சேனாவரையருரைப்பதிப்புக்களிலுங் காட்டப்பட்டுப் பொருட்பொருத்தமுடையனவாயிருக்கின்றன. நாம் என்னும் சொல்லுக்கோ, சேனாவரையருரைப்பதிப்புக்களிலே “நாவல்லார்” என்ற உதாரணங்காணப்படுகிறது; நச்சினார்க்கினியருரைப்பதிப்பிலே “நாமநல்லார்க்கதிர்படவுமிழ்ந்த” என்ற வுதாரணமும், “நாம் நாமமெனத் திரிந்துவழங்கிற்று” என்ற விசேடவுரையுங் காணப்படுகின்றன. ஆனால், இவ்விரண்டுதாரணங்களுக்குமே பொருள்விளங்கவில்லை.

நச்சினார்க்கினியருரைப்பதிப்பிலுள்ள விசேடவுரையானது, நாம் என்பது நாமம் எனத் திரிந்துவழங்கும் என்பதை உணர்த்திநிற்கின்றது. இதனால், நாம் என்னுஞ்சொல் இயல்பாகவேனும், நாமம் எனத் திரிந்தேனும் நின்று அச்சப்பொருளுணர்த்தும் என்பது பெறப்படுகின்றது. இவ் விருவகைகளும், சங்கநூல்களிலே வழங்கப்பட்டிருக்கின்றன. சீவகசிந்தாமணியின்உரையிலே நச்சினார்க்கினியர் இவற்றை அழகாக விளக்கியிருக்கின்றார். அவை வருமாறு:—

(1) பதிகம் 20-ம் பாட்டில், “நஞ்சூறுவேலான் பகைநாமறக் கொன்றவாறும்.” என்றவிடத்து, நாம் - அச்சம்; நாமமாயின் விகாரமாம்—என் றெழுதிவிட்டுப் பின்னர்,

(2) கனகமாலையாரிலம்பகம் 159-ம் பாட்டிலே, “நாம நல்லொளி நந்தனை யெனபவே” என்றவிடத்து, நாமம் - அச்சம்; உரிச்சொல் ஈறு திரிந்தது—என்று எழுதி விளக்கிச்செல்லுகிறார்.

இனி, இச்சொல்லுக்கு இவ்விரண்டுருவும் உளவேனும், நாமம் என்பதே சங்கநூல்களிற் பெருவரவிற்றாயிருக்கின்றது. இதனை,

"நாமஞ்சா றெவ்வரி னடுங்கினள் பெரிதே." (கலித்தொகை-30)

"அஞ்சீர் நாமவாய்மொழி" (பரிபாடல்-15.)

"நாமநல்லமர்செய்ய" (புறநானூறு-16.)

என்பவற்றால் அறியலாம். மேலும், அகநானூற்று-72-ஆம் பாட்டிலே "நாம நல்லராக் கதிர்பட வுமிழ்ந்த" என்பது 14-ஆம் அடியாகக் காணப்படுகின்றது. இதில், நாமநல்லரா என்பதற்கு-அஞ்சத்தக்க நல்லபாம்பு என்பது பொருளாம். ஆகவே மேற்கூறிய சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர்காட்டிய வுதாரணம், அகநானூற்றிலிருந்தெடுத்த "நாம நல்லராக் கதிர்படவுமிழ்ந்த" என்பதேயாம். சேனாவரையரோ, இவ்வடியிலுள்ள "நாமநல்லரா" என்பதைமட்டும் எடுத்துக்காட்டினார். இத்தொடர் அச்சிட்டவர்களினாலே "நாமநல்லார்" எனவும், "நாநல்லார்" எனவும் பிழைபட்டது.

பண்டைக்காலத்து ஏட்டுச்சுவடிகளைப் படிக்கும்பொழுது, பொருளுணர்ச்சியுடன் படிக்கவேண்டும் அஃதின்றேற் பிழைபடும். அதனால், அக்காலத்திலே 'காடு காடு பார்த்து வாசிக்கத்தெரியுமா' என்று வினவுவது வழக்கம். ஏனெனில் - 'காடு என்று எழுதினால் இதனை, காடு என்றேனும், கரடி என்றேனும் வாசிக்கலாம்; படிப்பவர், முன்பின் தொடர்ச்சிநோக்கிப் படிக்கவேண்டும். அக்காலத்தில், ரகரத்திற்குக் கீழேயிழுத்தலும், மெய்யெழுத்துக்களுக்குப் புள்ளிவைத்தலும், கொம்புகள் மேலேசுழித்தலுங் கிடையா. எனவே, 'நாமநல்லரா' என்பது, ஏடுகளில் 'நாமநலலரா' என் றெழுதப்பட்டிருக்கும். அதனை, ஒருவர் 'நாமநல்லார்' என்று படித்துக்கொண்டு அங்ஙனமே யச்சிட்டுவைத்தார்; மற்றொருவரும் அங்ஙனமேபடித்துக்கொண்டு, சந்தியிலே மகரம் கெடும் என்று நினைத்து அதனை நீக்கிவிட்டு 'நாநல்லார்' என்று அச்சிட்டு வைத்தார். அவர்கள் அவ்வாறச்சிட்டிருப்பினும், உரையாசிரியர்கள் காட்டியது அகநானூற்றிலிருந்தெடுத்த "நாம நல்லராக் கதிர்பட வுமிழ்ந்த" என்பதேயாம். தொல்காப்பிய வுரைப்பதிப்புக்களிலே, இவ்வாறு பிழைபட்டவை யின்னுஞ் சிலவுள; அவை சமயம்நேர்ந்தபொழுது வெளியிடப்பெறும்.

இங்ஙனம்,

அ. கோபாலையன்.

---

# எல்லப்ப நாவலர்.

[இலக்கணவிளக்க ஆசிரியர் பரம்பரை திரு. சோமசுந்தர தேசிகர்.]

அமிழ்தினுமினிய தமிழ்மொழியைக் கற்றுவல்ல நற்கவிகளாய்த் திகழ்ந்தோர் பல்லோராவர். அவர்களுள்ளே ஒரே பெயர்தாங்கி நிலவிய வரும் பலராவர். சிவப்பிரகாசப் பெயர்கொண்டு வாழ்ந்தவர்க்குக் கணக்கில்லை. மறைஞானசம்பந்தப் பெயரும் ஞானப்பிரகாசப்பெயரும் கொண்டோர் பல்லோர். இவ்வாறு ஒருபெயரைப் பலரும் கொண்டு பலகாலத்து வாழ்ந்துவந்திருப்பதால் பிற்காலத்தார் பலரும் ஒருவரென மயங்கி ஒருவர்செய்கையை ஒருவர்மேலேற்றிக் கூறுவது வழக்கமாகிவிட்டது. அம்முறையில் எல்லப்பன் என்று பெயர்படைத்துச் சிறப்புற வாழ்ந்தவர் ஒருவரா? இருவரா? என்று ஈண்டு ஆராய்வோம்.

1. எல்லப்பநாவலர்: என்ற தலைப்பின்கீழ்க் குமாரசுவாமிப்பிள்ளையவர்கள் [1]தமிழ்ப்புலவர்சரித்திரத்திற் கூறுவது பின்வருமாறு:—

இவர் திவ்வியகவி சைவ-எல்லப்பநாவலர் எனப்படுவர். இவரூர் சோழமண்டலத்திலே திருவெண்காட்டருகிலுள்ள இராதாநல்லூர் என்பர். குலம் வேளாளர்குலம். சமயம் சைவம். காலம் மணவாளதாசர் காலம் என்பர். இவர் தருமபுராவாதீனத்தைச் சார்ந்து பலகலைகளுங் கற்றவர். சௌந்தரியலகரிக்கு இவரியற்றிய வுரையினாலே இவர், தொல்காப்பியம், நன்னூல், தண்டியலங்காரம் முதலிய இலக்கணங்களையும், தேவாரம், திருவாசகம், சிவஞானசித்தியார் முதலிய நூல்களையுங் கற்றவர் என்பது புலப்படுகின்றது. இவர் இயற்றிய பிரபந்தங்கள் அருணைக்கலம்பகம், அருணாசலபுராணம், செவ்வந்திப்புராணம், திருவெண்காட்டுப்புராணம், திருவிரிஞ்சைப்புராணம், தீர்த்தகிரிப்புராணம், திருச்செங்காட்டங்குடிப்புராணம் முதலியன.

2. "சௌந்தரியலகரி உரைசெய்தார் சைவ-எல்லப்பநாவலரென்பது உரையாசிரியர்பெயரைக் குறிக்க எழுந்த செய்யுளான் விளங்கும். சைவசமயத்தில் அசாமானிய அபிமானத்தோடு உழைத்தவராதலின்

---

[1] பக்கம் 39-40,

இவர் பெயர்க்குமுன் சைவ என்னும் மொழியைச் சேர்த்துபசரித்தனர்போலும். திருவெண்காட்டுப்புராணத்தில் இவர்,

'செப்புமியற் றமிழ்களெலா மரியயனே
முதலாய தேவர்க் கோதி
யொப்புவிக்க வறியாம லானிடத்தே
வளைத்துவளைத் துரையா நின்றேன்'

என்றுரைத்தவிடத்துப் புலப்படுந் தலையன்பு ஊகிக்கற்பாலதேயன்றி உரைக்கற்பாலதன்று. 'சைவத்தின் மேற்சம யம்வே றிலையதிற் சார்சிவமாம் – தெய்வத்தின் மேற்றெய்வ மில்லெனு நான்மறைச் செம்பொருள் வாய்மை' என்று திருவருணைக்கலம்பகத்திற் சாற்றியவரும் இம்மகானே.

இனி, இவர் தாமைமாநகரரென முன்குறித்த செய்யுள் கூறத் திருவெண்காட்டுப்புராணம் பதிப்பித்தோர் திவ்யகவி–சைவ–எல்லப்ப நாவலர் வரலாறு என்றெழுதியதுள், இவர் திருவெண்காட்டில் தென் மேற்கில் ஒருநாழிகைதூரத்திற் காவிரியின் வடகரையிலிருக்கின்ற இராதாநல்லூரிலே பிறந்தவரென் றுரைத்தார். தாமைமாநகர் இவ்வூர் தானோ அன்றிப் பிறிதோரூரோ என்று தெளிதற் காதாரமில்லை. அவ்வரலாறு, இவர் கார்காத்தவேளாளர்குலத்திலே காலிங்கராயன் கோத்திரத்திலே பிறந்தவரென்றும், தருமபுர ஆதீனத்தையடுத்துச் சாத்திரத்தேர்ச்சியுற்று மஹாசந்நிதானத்தால் திவ்யகவி சைவ எல்லப்ப நாவலர் என்று பெயர்கொடுக்கப்பட்டவர் என்றுங் கூறும்.

உரைநூல்களுள் வேறொன்றும் இவர் செய்ததாகவழங்கக் காணுமாறில்லை; மற்று, இவர்செய்த நூல்கள்: அருணாசலபுராணம், திருவெண்காட்டுப்புராணம், செவ்வந்திப்புராணம் என்னும் திரிசிரமலைப்புராணம், திருவிரிஞ்சைப்புராணம், தீர்த்தகிரிப்புராணம், திருச்செங்காட்டங்குடிப்புராணம், திருவாரூர்க்கோவை, திருவருணைக்கலம்பகம், திருவருணையந்தாதி யென்பன.

இவர் பிள்ளைப்பெருமாளையங்கார்காலத்தவரென்றும், இருவரும் ஓராசிரியரிடத்துக் கல்விபயின்றவரென்றும், திருவரங்கக்கலம்பகமும் திருவருணைக்கலம்பகமும் ஒருகாலத்துச்செய்யப்பட்டனவென்றும் சிலர் கூறுவதுண்டு. அஷ்டப்பிரபந்தத்திற்கு முகவுரையெழுதிய

ஸ்ரீமான் குப்புசாமி முதலியாரவர்கள் வரையறுத்துரைத்தபடி, ஐயங்கார்காலம் பன்னிரண்டாம்நூற்றூண்டி னிடைக்காலமாயின் இருவரும் ஏககாலத்தவரென்னுஞ்சொற் பிழைபடும். இனி, நாவலர் பிற்காலத்தவர். பதினேழாம்நூற்றூண்டில் திகழ்ந்திருத்தல்கூடும் என்று உத்தேசமாக உரைக்கலாமேயன்றி வரையறுத் திதுதான் இவர்காலமென்பதற்குத் தக்க ஆதாரம் அகப்பட்டிலது," என்று திரு. அனவரதவிநாயகம் பிள்ளையவர்கள் சௌந்தரியலகரி [1]முகவுரையில் எழுதியுள்ளார்கள்

3. திருவாரூர்க்கோவை என்ற நூல் ஆ. மே. சென்னகேசவ நாயுடுவால் பரிசோதிக்கப்பட்டு ஒரு இருபது ஆண்டுகட்குமுன் 'சென்னை, சன் ஆப் இந்தியா' அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது. அதிலே காணப்படும் சைவ-எல்லப்பநாவலர் சரித்திரம் பின்வருமாறு:—

"இந்நாவலரது சரித்திரம் நன்றாய்த் தெரியவில்லை; பலர் பலவாறாகக் கூறுகின்றனர். இவர் பிறந்தது தாழைநகர் என்று சொல்லப்படுகின்றது. அது திருவருணையை யடுத்த ஊராயிருக்கலாம்போலும். இவருடையகாலம் மதுரையில் திருமலைநாயக்கர் அரசாண்டகாலமென்று சொல்லப்படுகின்றது. இதனால் இவர் ஏறக்குறைய 300 வருஷத்திற்கு முன் இருந்திருக்கவேண்டுமென்பது வெளியாகின்றது. இவருக்கும், திவ்வியகவி என்று சிறப்புப்பெயர்பெற்றுள்ள பிள்ளைப்பெருமாளையங்காருக்கும் மதவிஷயமாக வாக்குவாதம் உண்டாயிற்றெனறும் சொல்லப்படுகின்றது. இப்புலவர்பெருமான் திருவருணையில் வசித்திருந்தது பற்றித் திருவருணைச் சைவ-எல்லப்பநாவலரென்று சொல்லப்பட்டாரென்றும் பெரியோர் கூறுவர். சிலர் இப்புலவர்பெருமான் பிறந்தவிடம் யாழ்ப்பாணமென்றுங் கூறுவர். இவரியற்றிய நூல்கள் பல. அவற்றுள் இப்போது கிடைத்திருக்கும் நூல்களாவன:— அச்சிட்டவை:— 1. அருணாசல புராணம், 2. திருவிரிஞ்சைப் புராணம், 3. செவ்வந்திப் புராணம், 4. தீர்த்தகிரிப் புராணம், 5. திருவெண்காட்டுப் புராணம், 6. அருணையந்தாதி (திரிபு,) 7. அருணைக்கலம்பகம், 8. சௌந்தரியலகரி

[1] 1907ஆம்-வூ மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடப்பதிப்பு.

யின் உரை, 9. திருவாரூர்க்கோவை. அச்சிடாதவை:—1 திருவிரிஞ்சைக் கலம்பகம், 2. திருவருணைக்கோவை. 3. செவ்வந்திக்கோவை, 4. திரு விரிஞ்சைக்கோவை என்பனவாம்.

4. 1920-ம் ஆண்டு பி. நா. சிதம்பரமுதலியாரவர்களது சென்னை வித்யாரத்நாகர அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்ட அருணாசலபுராணத்தில் அப்புராணம் இயற்றியவர் இன்னாரென்றே கூறப்படவில்லை.

5. சென்னையரசாங்கப் புத்தகநிலையத்திலிருந்து வெளிவந்த 1916-17—1918-19 ஆகிய மூன்றுவருடப்பட்டியில் R. 317 (a) திருவாரூர்க்கோவை என்பதன்கீழ் 'இது திருவாரூரில் எழுந்தருளி யிருக்கும் தியாகராசர் விஷயமானது' திருவண்ணாமலையில் வசித்தவ ராகிய தாழைநகர் எல்லப்பநயினா ரென்பவர் இவ் வழகிய நூலை யியற்றினா ரென்று தெரிகிறது என்றும், அருணையந்தாதியின்கீழ்த் தாழைநகர் எல்லப்பநயினார் இயற்றியது என்றும் எழுதப்பட்டிருக்கிறது.

6. திரு. கா. சுப்பிரமணியபிள்ளையவர்கள் எழுதிய தமிழ் இலக்கிய வரலாறு என்ற புத்தகத்தில் பின்வருமாறு காணப்படுகிறது.[3] சைவ-எல்லப்பநாவலர் தொண்டைநாட்டிலே தாழைநகரிற் பிறந்து வாழ்ந்தவர். இவர்பெருமை அருணாசலபுராணத்தினாலும், அருணைக் கலம்பகத்தாலும் இனிது விளங்கும். கலம்பகத்தில் சைவத்தின் ஒப் புயர்வின்மையை எடுத்துமொழிந்தார். சைவத்தை நிலைநாட்டினமை யால், இவர் சைவ என்ற அடைமொழிகொடுக்கப்பட்டார், இவரும் சிலேடையில் வல்லவர்.

"ஆராயுங் காலெடுப்ப தையமன்றோ வம்மானை
அன்னமறி யாரெடுப்ப தையமோ வம்மானை"

என்ற இடத்தில், அன்னம்—சோறு, அன்னப்பறவை; ஐயம்—பிச்சை, சந்தேகம் என இருபொருள்பட மொழிந்தமை காண்க. இவர் செவ்வந் திப்புராணம், திருவெண்காட்டுப்புராணம், திருச்செங்காட்டங்குடிப்

[3] பக்கம் 444, 445.

புராணம், திருவிரிஞ்சைப்புராணம் முதலியன பாடினவர். சௌந்தரிய லகரிக்கு உரைகண்டவர்.

திரு. அனவரதவிநாயகம்பிள்ளையவர்கள் தவிர மற்றெல்லோரும் எல்லப்பன் என்ற பேருடையார் ஒருவரேயென்று கண்டனர் என்பது வெளிப்படை. அனவரதவிநாயகம்பிள்ளையவர்கள்மாத்திரம் சௌந்தரிய லகரி உரைப்பாயிரம் தாழைமாநகர் என்றுகூறத் திருவெண்காட்டுப் புராண முகவுரை சைவ—எல்லப்பநயினர் இராதாநல்லூரிற்பிறந்தார் என்று கூறுவதைக்கொண்டு ஐயமுற்றார்கள். எனினும் தாழைமாநகர் இவ்வூர்தானோ அன்றிப் பிறிதோரூரோ என்று தெளிதற்கு ஆதார மில்லை என்று எழுதிச்சென்றார்கள்.

இரண்டாண்டுகட்குமுன் இதனைப்பற்றி யாராய்ந்தபோது சைவ—எல்லப்பநாவலர் என்றொருவரும் எல்லப்பநயினர் என்றொருவரும் இருக்கவேண்டும் என்ற முடிவுக்குவந்து அதனை ஆங்கிலத்தில் பிரசுர மாகும் மிதிக் சுசைட்டி ஜர்னலில் வெளியிட்டேன்.[4] அது பின்னும் வலியுறுகின்றமை கீழே காட்டுவேன். திருவாரூர்க்கோவை முடிவிலே,

[5] "திணைபாதி யாயிரண் டும்வழு வ.மற் றெளிர்துசிவத்
திணையான தொன்றிநம் மாரூர்த் தியாக ரிணையடியே
துணையாக் முத்தமிழ்க் கோவைசெய் தான்வட சொற்கடற்கும்
புணையான வன்றிரு வண்ணா மலையெல்ல பூபதியே"

என்று காணப்படுகிறது. இச்செய்யுளின்படி திருவண்ணாமலையிலுள்ள எல்லபூபதியென்பான், வடமொழியில் வல்லவனாய், ஆரூர்த்தியாகர் இணையடியே துணையாகக்கொண்டு திருவாரூர்க்கோவைசெய்தா னென் றாகிறது.

சௌந்தரியலகரியின் உரையிலே உரையாசிரியர்பெயர் என்ற தலைப்பின்கீழ்,

---

[4]Q. J. M. S. XXI. P P. 58-61.

[5]இது அச்சிடப்பட்ட புத்தகத்திற் காணப்படவில்லை. ஏட்டுப்பிரதிகளிற் காணப்படுகிறது.

“பிறைபுனைந் தருளுஞ் சிவன்றன துவகைப்
பெருக்கென வடமொழி முனிவ
னறைசவுந் தரிய லகரியைத் தமிழா
லருள்கவி ராஜபண் டிதன்ற
னிறைமனங் கருதித் தாழைமா நகரி
னிலைபெற வாழ்கவி யெல்லான்
இறையள வெனினுந் தவறிலா துரைதேர்ந்
தெழுதின னெழில்விளக் கெனவே”

என்ற செய்யுள் காணப்படுகின்றது. கவிராஜபண்டிதருடைய உளக் கருத்து இதுவாகுமென அறிந்து சிறிதும் வழுவாது தாழைநகரில் வாழும் எல்லான் என்ற கவிஞர்பெருமான் உரையெழுதினன் என்பது இச்செய்யுளின் கருத்தாகும். இந்த எல்லான் என்னுங் கவி வடமொழியில் வல்லவன் என்று கூறுவிடினும் வடமொழி மிகுதியும் அறிந்தவர் என்பது தவறிலாதுரைதேர்ந்தெழுதினன் என்பதால் தொனிக்கிறது.

சென்னை அரசாங்கத்துக் கையெழுத்துப் புத்தகாலயத்தினின்று வெளிவரும் மூவருடப்பட்டியில் R, 317 நிர். (b) திருவருணையந்தாதியின்கீழ், ‘தாழைநகர் எல்லப்ப நயினார் இயற்றியது’ என் றெழுதப் பட்டிருக்கின்றது. அருணையந்தாதியிலோ இது சைவ–எல்லப்ப நாவலரால் இயற்றப்பட்டதென்று அச்சிடப்பட்டிருக்கின்றது. இவற்றால் தாழைமாநகரிற் பிறந்து திருவண்ணாமலையிலே வாழ்ந்த எல்லான் எல்லபூபதி என்ற கவிஞர்பெருமான் ஒருவருண்டு என்று அறிகின்றோம்.

சென்ற 1923–29. ஆண்டுக் கல்வெட்டறிக்கையில் திருவண்ணாமலைக்கல்வெட்டுக்கள் சில படியெடுக்கப்பட்டுள்ளன. அவற்றிற் சில பாக்களும் காணப்படுகின்றன. அப்பாக்களின்கீழ் எல்லப்பநயினார் சொன்னது[6], காலிங்கராயன் உண்ணாமுலை எல்லப்பநயினார் சொன்னது[7],

---

[6] Inscriptions, 419 of 29.

[7] Ibid.

எல்லான்கவி[8] யென்று காணப்படுகின்றன. இப்பாக்களைப்பற்றி யாராய்ந் தெழுதிய கல்வெட்டுத்துறையாரும் காலிங்காரயர் உண்ணாமுலையம்மை மகனார் எல்லப்ப நயினார் தஞ்சைச் சேவப்பநாயக்கர்மேல் அவர் கோபுரம் கட்டியதைக்குறித்து மூன்று துதிகவிகள் பாடியிருக்கின்றனர். மற்றொரு கவியில் தில்லை கடலூர் ஐயாறு கச்சி சோணகிரி வேளூர் என்ற திருப்பதிகளுக்குத் தான் கொடுத்த கொடைகளைப்பற்றிக் கூறுகிறார்[9] என்று எழுதியிருக்கின்றனர்.[10] ஆகவே முற்குறித்தபடி எல்லான், எல்லா நயினான் என்பவர் ஒருவருண்டு என்பது உறுதிபெறுகின்றது.

## சைவ எல்லப்ப நாவலர்

இனி, சைவ-எல்லப்பநாவலரைப்பற்றியாராய்வோமாயின் இவர், பட்டினத்தடிகள் சிறைகிடந்த சேந்தனாரை மீட்கும்படி வேண்டிய குஞ்சரக்கன்று எழுந்தருளியிருக்கும் திருவெண்காட்டிற்கு அருகிலுள்ள இராதாநல்லூர் என்ற ஊரிலே கார்காத்தவேளாளர் வகுப்பிலே பிறந்து இளமையிலேயே கல்விபயின்று வந்தார். பின்னர் அக்காலவழக்கப்படி தருமபுர ஆதீனத்தை அடைந்து தீட்சைபெற்றுச் சமயக்கல்வியோடு இலக்கியப்பயிற்சியிலும் மேம்பாடுற்று விளங்கினார். [11]அக்காலத்திருந்த மடபதியால் நன்குமதிக்கப்பெற்று நாவலர் என்ற பட்டமும் பெற்றார். இவர் சைவசமயத்தில் மிகுந்த ஆர்வமுடையவரா யிருந்ததோடு அருணைக்கலம்பகத்திலே,

"சைவத்தின் மேற்சம யம்வே றிலைபதிற் சார்சிவமாந்
தெய்வத்தின் மேற்றெய்வ மில்லெனு நான்மறைச் செம்பொருள்வாய்
மைவைத்த சீர்த்திருத் தேவார மூந்திரு வாசகமும்
உய்வைத்த ரச்செய்த நால்வர்பொற் றாளெம் முயிர்த்துணையே"

---

[8]Ibid 420 of 29.

[9]Report on Epigraphy for the year ending March 1929.

[10]T. S. குப்புசாமிசாஸ்திரிகள் எழுதிய 'தஞ்சை நாயகமன்னர் வரலாறு' என்ற சிறுபுத்தகத்தில் 1572-ம் ஆண்டில் இக்கல்வெட்டு வெட்டப்பட்டதாகக் குறிக்கப்பட்டிருக்கிறது.

[11]சிறிதுகாலம்முன்னர்வரை சைவமடங்களையடுத்து பலவகைக் கல்வியும் பயின்றோர் பல்லோராவர். அவ்வாறு பயின்றோருட் சிலர் இன்றும் உளர்.

என்று பாடியதுகொண்டு சைவ என்ற அடைமொழி கொடுக்கப்பட்ட தென்பர். நாவலர் சைவசமயத்தைச் சார்ந்தவராவதோடு சுத்த சைவ வேளாளராகவு மிருத்தலினுல் சைவ என்ற அடைமொழியில் விசேட மிருப்பதாக எனக்குத் தோற்றவில்லை. அதனைவிட இருவர் எல்லப்பர் தோன்றியதாலும் இருவரும் கல்விநலம் கைவரப்பெற்றவராயிருத்தலி ணுலும், ஒருவரினின்றும் ஒருவரைப் பிரித்துக்காட்ட இவர் சைவ-எல்லப்பநாவலர் என்று குறிக்கப்பட்டிருத்தல்வேண்டும் என்று தோற்றுகிறது. மற்றையவர் எல்லபூபதி யென வழங்கப்பட்டனர்.

## எல்லபூபதி.

இனி, எல்லபூபதியென்பார் திருவண்ணுமலைக்கு அண்மையி லுள்ள தாழைமாநகரிற்பிறந்தவர். அருணையிலேவாழ்ந்தவர். கல்வி கேள்விகளிற் சிறந்தவர். பூபதி என்ற பட்டந்தரித்திருத்தலினுலே நாட்டுமன்னனிடம் பெரும் உத்தியோகம் வகித்தவரென்று தோன்று கிறது. திருவாரூரிற் சிறப்புற்றிலகி இலக்கணவிளக்கம் வகுத்து உரையெழுதிய வைத்தியநாததேசிகரின் மாணவரில் ஒருவரான படிக் காசுப்புலவர் ஒரு எல்லப்பனைக் குறிக்கின்றார்[12]. அவ்வெல்லப்பன் இவர்தானே வென்பது ஆராய்ச்சிக்குரியது. திருவண்ணுமலைக்கோயிலிற் காணப்படும் கல்வெட்டொன்றில் இவர் தில்லை, கடலூர், ஐயாறு, கச்சி, சோணகிரி, வேளூர் என்ற வைத்தீசுரன்கோயில், ஆவாசத்தி என்ற ஊர்களில் இடபமும் பஞ்சசத்திகளும் செய்துவைத்தார் என்றும் கூறப்படுகின்றது.

இவரது காலம் முன்கண்டபடி சேவப்பநாயக்கர்காலமாகும். சேவப்பநாயக்கர் கி. பி. 1549 முதல் 1572 வரை தஞ்சையிலிருந்து அரசுபுரிந்தவர். இவர் திருவண்ணுமலையிலே அண்ணுமலையீசர் சந்நிதி

---

12 "எல்லப்ப னம்மையப்பன் றருதிருவேங் கடநாத னெழிற்சீ ராமன்
வல்லக்கொண் டையன்மாதை வேங்கடே சுரன்போல வரிசை செய்தே
செல்வத்தம் பியருடனே கத்தூரி மகன்கறுப்பன் றெருவீ திக்கே
பல்லக்குத் தான்சுமந்தா னதுநமக்கோ ராயிரம்பொன் பரிசு தானே."

யிலே குளமும் கோபுரம் ஒன்றும் கட்டியிருக்கின்றார். அவற்றைக் குறித்துச் சில பாக்களை எல்லப்பர் பாடியிருக்கின்றார். அவை திருவண்ணாமலைக்கோபுரவாயிலிலே பொறிக்கப்பட்டிருக்கின்றன. இக் கல்வெட்டுக்களின்காலம் கி.பி. 1572 என்று தஞ்சைஜில்லா கஜட் டீயர் கூறுகின்றது[13]. ஆகவே இவர்காலம் கி.பி பதினாறும்நூற்றாண் டின் பிற்பகுதியென்று கொள்ளலாம். சைவ எல்லப்பநாவலர்காலமும் சற்றேறக்குறைய அதுவாகவேயிருக்கலாமென்று எண்ணவேண்டி யிருக்கிறது. இவரதுகாலத்தைத் திட்டமாகக் கூறக்கூடிய சாதனங்கள் ஒன்றும் இதுவரையிற் கிடைக்கவில்லை

சைவ–எல்லப்பநாவலர் பாடியனவாகக் குறிக்கப்பட்ட பலநூல்க ளுள்ளும், திருவாரூர்க்கோவை, சௌந்தரியலகரிஉரை, அருணையந்தாதி இம்மூன்றும் அவர் இயற்றியனவல்ல. தாழைநகரிற் பிறந்து அருணை யில் வாழ்ந்த எல்லபூபதி செய்தன. அருணாசலபுராணமும் திரு விரிஞ்சைப்புராணமும் நாவலர் இயற்றியனவாகக் காணப்பட்டாலும் அவற்றைச் செய்தவர் எல்லபூபதியே யென்று தோற்றுகிறது. அருணா சலபுராணத்தில் அவற்றை இயற்றினர் இவர்தாமெனச் சொல்லக்கூடிய ஆதாரமொன்றும் காணாவிடினும், திருவிரிஞ்சைப்புராணத்திலே அருணா சலபுராணம் பாடி பெரப்புக்கொள்ளப்பட்டதனாலே இப்புராணமும் பாடத்துணிந்தேன் என்று அப்புராணஞ்செய்தார் கூறுகின்றார்.

> "உற்ற செய்யுளா லருணைமா நகர்ச்சிறப் புரைத்தேன்
> குற்ற மானது குணத்தவர் பொறுத்துளங் கொண்டார்
> சிற்றை நாளுமச் செருக்கினா லிதனையு மிசைத்தேன்
> கற்ற மாந்தருக் கனைத்தையும் பொறுப்பது கடனாம்"

என்பது அச்செய்யுள்,

அருணாசலபுராணம், திருவிரிஞ்சைப்புராணம் இரண்டும் பாடி யவர் ஒருவரே யென்பது இச்செய்யுளாற் பெறப்படுதலினாலும் மற்றைச்

---

[13] Gazetteer of the Tanjore District. i.p. 38.

செவ்வந்திப்புராணம், திருவெண்காட்டுப்புராணம், தீர்த்தகிரிப்புராணம் முதலாயினவற்றை இயற்றினார் பெயர் குறிக்கப்படாமையானும் அவற்றை யியற்றியவர் வேறு இவர் வேறு என்று கொள்ளக்கிடக்கின்றது.

செவ்வந்திப்புராணத்தில் அப்புராணம் சைவ—எல்லப்பநாவலர் பாடியதாகக் காணப்படாவிடினும், வேறொருவர் பாடியதாகக் காணப்படாமையின் அவ்வாறு காணப்படும்வரை அவர் பாடியதாகவே கொள்வதில் இழுக்கு ஒன்றுமில்லை.

இஃது மற்றைப் புராணங்களான திருவெண்காட்டுப்புராணம், தீர்த்தகிரிப்புராணம், திருச்செங்காட்டங்குடிப்புராணம், அருணைக் கலம்பகம் இவைகட்கு மொக்கும்.

---

192 மூக்குத்தி முத்தாட முத்து வடமாட
நோக்கிரண்டு மாட நுசுப்பாட—ஆக்கமகள்

193 கொண்டாட மாதுசெங்கை கொண்டாடும் போதிலே
வண்டாடுங் கூந்தலனை மாதனைக்—கண்டிங்

194 கமையு மமையுமட வன்னமே யென்னும்
அமைய மதனிலெமை யாளும்—உமைபாகன்

195 அத்த னிருத்த னடிக்கண் மலர்க்கணை
வைத்திட மெச்சி மகிழ்ச்சிபெ—றத்திரி

196 விக்ரம னுக்கு மிகுத்த ப்ரபைக்கன
சக்ரம ளித்திடு தற்பரன்—உக்ரம

197 குக்குட முற்ற கொடிக்கர சைச்சொறு
திக்கை யனைத்தரு சிட்டன—னுக்ரக

198 சச்சிதா னந்தச் சதாசிவனம் பொற்றடந்தேர்
விச்சைமணி வீதிதனின் மேவுதலும்—பச்சைமயில்

199 ஆயமன்ன சாய லணியிழைமின் னருடனே
தாயரும்போற் றிப்பணியத் தான்பணிந்தாள்—தூயனத்தன்

200 மாலளந்து காணு மலையை யிருவிழிக்கோ
லாலளந்தா ளந்த வளப்பறிந்தார்—பாலனைமார்

---

192-3. நோக்கு-கண்கள். நுசுப்பு-இடை. ஆக்கமகள்-திருமகள். மாது-பெதும்பை. கொண்டு-மேற்கூறிய அம்மானைகளைக்கொண்டு.

194. அமையும்-போதும். அமையம்-சமயம்.

195. மலர்க்கணை-மலர்போன்ற கண்ணை.

195-6. திரிவிக்ரமனுக்கு-திருமாலுக்கு. ப்ரபை-ஒளி. சக்கரம்-சக்கராயுதத்தை.

197. குக்குடம்-கோழி. அரசை-முருகக்கடவுளை. சொல் துதிக்கையனை-விநாயகரை.

198. விச்சை-சிற்பவித்தை.

199. ஆயம்-கூட்டம்.

200. கோல்-அம்பு, அளவுகோல். அளப்பு-அளத்தலை. பால்-பக்கத்துள்ள.

4

201 தன்னை யறியுந் தருணம்வந்த தாற்றலைவன்
தன்னை மனக்குறிப்பிற் றானறிந்தாள்—மின்னெனவே

202 எண்ணிய போதி லிவர்பாகம் பச்சையாய்
நண்ணியவா றேது நவிலுமெனக்—கண்மணியே

203 சூலிக்குப் பச்சுடம்புஞ் சொன்முலைப்பா லும்பெருகப்
பாலிக்கு மென்றுசொல்லாற் பாராட்டிச்—சேல்விழிப்பெண்

204 மாலையிட வந்தீரிம் மாதினுக்கு நீர்வலிய
மாலையிட வந்ததென்ன மார்க்கமோ—மேல்பசப்புக்

205 காட்டுமான் காட்டியிசைக் கானமறி யாதவெங்கள்
வீட்டுமான் கைக்கொளவோ வீதிவந்தீர்—கேட்டீரோ

206 நன்றாச்சு தையர் நடத்தைவிடர் புல்லருமே
நன்றாச் சரியமென நாடுவார்—என்றென்று

207 செப்பும் வினோதந் திறமெனக்கொண் டேயமுதம்
ஒப்புமிள மூரலுட னோர்வீதிக்—கற்புதனும்

208 செல்லக் கனிவாய்ச் சிறுகுயிலு மின்னாரும்
இல்லத் திருந்தா ரினியொருத்தி—வல்லதிரு

---

202. அன்னைமார் (200) எண்ணியபோதில். என-என்று பெதும்பை கேட்க.

203. சூலி-சூலத்தையுடைய உமை, கர்ப்பம் உடையவள். பச்சுடம்பு-பச்சை உடம்பு, ஈன்றணிமைத்தாகிய உடம்பு. பாலிக்கும்-அருள்செய்வார். சேல்விழிப்பெண்-அங்கயற்கண்ணம்மை.

203-4. இத்தலத்தில் வேதசன்மாவுக்காகச் சிவபெருமான் மணக்கோலம் காட்டிய வரலாறு இங்கே அறிதற்குரியது; கண்ணி, 27-31. மாலை-மயக்கத்தை. பசப்பு-பச்சைநிறம், ஏமாற்றுதல் (பாசாங்கு); "இயல் பசப்பும்" சாபேந்திர. துறவந்தி, 30.

205. மானைக்காட்டி மானைப்பிடித்தல் வேடர்கள் வழக்கம். மான்-உமாதேவியார். கானம்-சங்கீதம், காடு; சிலேடை. காட்டுமானைக் காட்டி வீட்டுமானைக் கொள்ளவந்தீரென்பது இதிலுள்ள நயம்.

206. நன்று ஆச்சுது; ஆச்சுது-ஆயிற்று; 233. நடத்தை-நடை, நடனத்தை. விடர்-விடபுருஷர்கள், விஷத்தையுடைய ஆதிசேட அவதாரமாகிய பதஞ்சலிமுனிவர். புல்லர்-புன்மைக்குணம் உடையவர், புலிக்காலையுடைய வியாக்கிரபாதர்; புல்-புலி. நன்று-மிகுதி.

208. குயில்-பெதும்பை.

மங்கை.

209 மங்கைகலை மங்கைமலை மங்கையெனு மூவருமிந்
நங்கைதனைக் கண்டக்கா னம்பதிகள்—இங்குநமை

210 வஞ்சிப்ப ரென்று மனம்வாக்குக் காயத்தில்
அஞ்சா திருக்கவெழி லார்மங்கை—எஞ்சாது

211 காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரு மயலென்றாற்—போலவே

212 பேதை யரும்பிப் பெதும்பையந்தப் போதாகி
மாது மலர்ந்த வனப்பினாள்—சோதிமணிப்

213 பன்னாகம் பூண்டோன் பாவையிடைத் தூதுசென்ற
அன்னா ளிருள்போ லளகத்தாள்—உன்னுமல்

214 அன்றுநமை வென்றகண்ணோ னன்றுமினிச்செய் கையிதென
நின்றுநின்று பார்த்து நினைத்துமதன்—இன்றுசிவன்

215 முக்கணையும் வெல்ல முழுநீல முக்கணையா
இக்கணையோ டெய்வே னெனுங்கண்ணாள்—தக்கதிறல்

216 நாண்மடமச் சம்பயிர்ப்பா னன்மந் திரர்சூழப்
பூண்முலையா மாமகுடம் பொற்பமைத்து—மாணிழைமார்

---

209. பதிகள்—கணவர்கள்.

208–10. மனம்—மார்பு; அதிலுள்ளவள் திருமங்கை. வாக்கு—இங்கே நாக்கு; அதிலே உள்ளவள் கலைமங்கை. காயம்—உடம்பு; அதிலே உள்ளவள் மலைமங்கை; நிரனிறை.

211. "காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலருமிந் நோய்" என்னும் திருக்குறளை இக்கண்ணி குறித்துச் சுவைததும்ப நிற்கின்றது.

212. மாது—காதல்; சீவக. 356.

213. பல் நாகம்—பல பாம்புகளை.

214. நின்று நின்று பார்த்து—மிக ஆலோசித்து.

215. முக்கணையும் வெல்ல—மூன்றுகண்களையும் வெல்ல. தன்கையிலுள்ள நீலமலர்ப்பாணம் ஒன்று; இவள்கண்ணாகிய நீலமலர்ப்பாணம் இரண்டு. முழுநீலம்: "மாதே முழுநீலங், கொல்லும்" இரத்தினச் சுருக்கம், 11.

216. மந்திரர்—மந்திரிகள்.

217 அங்கசன் மந்த்ரமெல்லா மாக்கம் பெறவுரைப்பத்
தங்குமனச் சிங்கா தனத்தேற்றி—அங்கணன்றன்

218 சீர்த்தி யபிடேகஞ் செய்து தலைமைபெறு
மூர்த்திகா முண்டாக்கி மோகமெனும்—பார்த்திபனைக்

219 கிட்ட மிருந்தநல்லா ரெல்லாருங் கொண்டாடப்
பட்டந் தரித்த பருவத்தாள்—கட்டிசைந்த

220 செம்பதும ராகச் செழுமணிப்பொன் னாடரங்கில்
அம்பதுமை மின்னா ரருகிருக்க—விம்பவிதழ்

221 அன்னமுன்னர் தாருவனத் தங்கனைமா ரேந்தியபால்
அன்னமென முத்தினணி யம்மானை—தன்னிருகைக்

222 கொண்டா ளிசையாற் குயினாணச் செங்குமுதம்
விண்டா ளெடுத்து விளையாடல்—கண்டோர்கள்

223 துன்றனமூன் றங்கையெனச் சொல்வனசப் பூவிரண்டில்
ஒன்றிருக்க வொன்றெழுவ தொக்குமென—வென்றிமழு

224 வல்லா னுருவெளியின் மாலை யெனத்திரண்டு
பல்லாரங் கன்றெழுந்து பார்ப்பதென—வல்லமைசொல்

225 அம்மானை யாடிவென்ற வம்மானைப் பாடியே
அம்மானை யாடு மளவிலே—எம்மானும்

---

218. சீர்த்தியாகிய நீரை அபிஷேகம்செய்து; சீர்த்தி வெள்ளைநிறமுடையது; அதனால் அது வெண்மைநிறமுடைய அபிஷேகதீர்த்தமாகக் கூறப்பட்டது.

217-8. அபிடேகத்தாலும் மந்திரத்தாலும் மூர்த்திகாமுண்டாகுமென்பர்; காஞ்சிப்புராணம், நகரேற்றுப்படலம் 162-70-ஆம்பாடல்களைப் பார்க்க.

219. நல்லார்-பெண்கள், சான்றோர். கட்டு-கட்டுதல்.

220. பதுமை-திருமகள். விம்பம்-கொவ்வைக்கனி.

221. அன்னம்-மங்கை; எழுவாய். பாலன்னம்-பாற்சோற்றுத்திரளை.

222. செங்குமுதம் விண்டாள்-வாயைத்திறந்து பாடினள்.

223. துன்று அனம் மூன்று-நெருங்கிய மூன்று அன்னப்பறவைகள்.

225. அ மானை-அந்தக் காளியை; அ: உலகறிசுட்டு. ஆடிவென்ற-ஊர்த்துவதாண்டவம்செய்து வெற்றிகொண்ட. அம்மானை-சிவபெருமானை. திருக்காளத்திநாதருலா, 349; திருப்பூவணநாதருலா, 265.

226 சீதள சோம திவாகர லோசன
வேத சொரூப விநோதபு—ராதன

227 மாருத பாவக மாதவ சாயக
மேரு சராசன வீரச—ரோருகப்பொற்

228 பாதன் கயிலைப் பரமன் கடம்பவன
நாதன் றிருவீதி நண்ணுதலும்—மாதுகாத்

229 தம்மனையை வைத்தா ளனமனையார் தங்களுடன்
அம்மனைநின் றேகி யடிபணிந்தாள்—சென்மக்

230 கருவிலியைக் கண்ணாக் கண்டாள்கண் காணு
உருவிலியைக் காணென் றுறுக்கி—மருமத்

231 தொருகோல் செவிமட் டுறவாங்கி விட்டான்
குருகோ லிடுங்காப்பூங் கோதை—வெருவியே

232 அம்புலி யென்ப தழற்க ணுறும்புலியோ
வம்புரைக்கப் பெண்கண்மட மானுரோ—கும்பமுனி

233 குன்றிற் பிறந்த குழவியிளங் காலுடலம்
கன்ற வுதைத்திடும்வன் காலரச்சோ—ஒன்றுகுயில்

---

226. சோம திவாகர லோசனம்—சந்திரனையும் சூரியனையும் கண்ணாக உடைய.

227. மாருத பாவக மாதவ சாயகம்—காற்று, நெருப்பு, திருமால் என்னும் மூவராலாகிய அம்பையுடைய; "வல்வாயெரி காற்றீர்க்கரி கோல்வாசுகி நாண்கல், வில்லாலெயி லெய்தான்" (திருஞா. தே.) மேருசராசனம்—மேருவாகிய வில்லையுடைய. சரோருகம்—தாமரைமலர்.

229. அ மனை யின்று.

229-30. சென்மக்கருவிலியை—பிறப்பில்லாதவரை. உருவிலி—மன்மதன்; இது தன்மைக்கண் வந்தது. மருமத்து—மார்பில்; நெஞ்சில்.

231. ஒருகோல்—ஓரம்பு; என்றது தாமரையரும்பை; அதுவே நெஞ்சி லெய்யப்படுவது; "நெஞ்சி லரவிந்தம்" இரத்தினச் சுருக்கம், 37.

232. வம்பு—பழிமொழி. கும்பமுனி—அகத்தியர்.

233. குன்று—பொதியில்மலை. குழவியிளங்கால்—தென்றற் காற்று; "சிறுகாற் குழந்தாய்கேள்" (பத்மகிரிநாதர் தென்றல்விடுதூது, 112.) கால்—காற்று, பாதம்.

234 ஓசையெல்லாங் காளகண்டத் தூற்றதோ வுள்ளடங்கும்
ஆசையினி யாசைக் கடங்காதோ—பேசுமொழி

235 அஞ்சுகமன் னீரிரவின் யாமமொரு நாலுமினி
அஞ்சுகமோ வாறுகமோ வாரறிவார்—நெஞ்சுகந்து

236 கூட்டிவைக்க வல்லீரோ கூறுமெனத் தெள்ளமுதம்
ஊட்டிவைத்த சொல்லா ருரைசெய்வார்—கேட்டீரோ

237 பாதி யுடம்பாய்ப் பசப்பையுற்ற பெண்பாலாற்
போதவன்னி யத்தமனப் போதுறலாற்—கோதிலா

238 மீனக் கொடியன் விரைவிற் பயந்ததால்
ஊனக் கொடிபகரு வுள்ளடையா—மோனர்

239 இமய வரையளித்த வெந்தையனை யென்னும்
உமையு முமையுமே யொத்த—அமைவால்

240 இவளுக் கொருபா லிசையுமெனப் பாகத்
தவளுக் கரியா தமைக்கும்—உவமை

---

234. காளகண்டம்–குயில்; விஷம்பொருந்திய கழுத்தென்பது வேறு பொருள். ஆசைக்கு–திக்குக்களில்.

235. அம் சுகம் அன்னீர்; சுகம்–கிளி. அஞ்சு உகமோ–ஐந்து யுகங்களோ; "இற்றை நீடிரவொன், றஞ்சுகந் தத்தை விளக்கும்" திருவேங்கடத் தந்தாதி, 12.

237–9. சிவபெருமானுக்கும் அம்பிகைக்கும் மங்கைக்கும் சிலேடை.

பசப்பு–பச்சைநிறம், பசலை. வன்னி அத்தம் மன்ன போதுறலால்–நெருப்பு கையின்கண் இருக்க வருதலால், கிளி கையின்கண் தங்கியிருப்ப வருதலினால்; அத்தமனப்போது வன்னி உறலால்; வன்னி–நெருப்பாக. மீனக்கொடியன்–மன்மதன், பாண்டியன். விரைவில்–சீக்கிரத்தில், மணம்பொருந்திய பூவாகிய வில்லை. பயந்ததால்–அஞ்சினமையால், பெற்றதால்.

239. இமையவரையளித்த: சிலேடை, எந்தை என்னும் உம்மையும் அனை என்னும் உமாதேவியையும் என முறையே கூட்டுக.

240. ஒருபால்–ஒருபக்கம். என–என்று தோழியர் சொல்ல. பாகத்தவளுக்கு–உமைக்கு. அமைக்கும்–அடக்கும்; பெயரெச்சம்.

241 அபய காத்திலங்க வைந்துருவின் மேலாம்
உபயன்மற்றோர் வீதிதனி லுற்றான்—அபரி

242 மிதமான தாருவன மேவு முனிவோர்
இதமா யிவண்மருவு மின்பம்—உதவாத

243 சங்கைத் தவமே தவஞ்செய்தோ மென்னமன்னும்
மங்கைக்கு மேலான மாமடந்தை—பொங்குகதிர்ச்

மடந்தை.

244 சந்திரனாற் சூரியனாற் றள்ளுண் டுடைந்தோடி
வந்து புகுந்து மறைந்துமறைந்—துய்ந்திடவே

245 வானு மிருட்கு மலரோன் வகுத்துவைத்த
கானு ரரண்போற் கருங்குழலாள்—தேனாரும்

246 சொல்லாண் மதனனுக்குஞ் சொல்லுவாள் புத்திகொங்கை
கல்லாள்கொக் கோகமுற்றுங் கற்றறிந்தாள்—எல்லாம்

---

240-41. அப்யகரமானது போதுமென்று அடக்குதலைக்காட்டினாற் போன்றதென்பது கருத்து; "கூடுங் கதியொருகாற் கும்பிட்டாற் போதுமென, நாடு மபிநயத்தை நண்ணிற்றால்-ஓடியகட், காதனர் காணவொரு கால்காட்டிக் கையமைத்து, நாதனர் செய்யு நடம்" (சிதம்பரமும்மணிக்கோவை, 29) என்பதில் அபயக்கை போதுமென்னும் குறிப்பைக்காட்டுவதாகக் கூறப்பட்டிருத்தல் காண்க.

241. ஐந்துரு-பஞ்சகிருத்தியத்திற்குரிய மூர்த்திகளின் உருவங்கள். உபயன்-அருவுருவுடையவர்.

242. முனிவோர்: எழுவாய்.

243. சங்கைத்து-சந்தேகமுடையது. அவமே தவஞ்செய்தோம்; அவமே-வீணாக. மங்கைக்கு-மோகினிக்கு.

245. கானாரண்-காட்டரண்; குழலுக்குக் காட்டை உவமைகூறுதல் மரபு; "குழற்கா டேந்துமிள வஞ்சிக் கொடியே" (மீனாட்சியம்மைபிள்ளைத் தமிழ், வருகைப். 9); "ஐம்பாற் காடேந் சுமக்குங் கரும்பே" (சகலகலாவல்லிமாலை, 2.) ஆரும்-ஒக்கும்.

246. புத்தி சொல்லுவாள். கல்-மலை, கல்லாள்.....கற்றறிந்தாள்: சொன்முரண்.

247 கரும்புருவ வில்லாள் கமழ்கமல வில்லாள்
கரும்புருவ வில்லாள்வேற் கண்ணாள்—அரும்பு

248 நகையா டளிரன் னகையாள் பணிமே
னகையாள் புவிமே னகையாள்—சகமகிழும்

249 பூங்குமுதச் செங்கனிவாய்ப் பூவைதனித் தில்லிருந்தோர்
பாங்கிதனைக் கூவியுயிர்ப் பாங்கியே—ஈங்கெழுதும்

250 ஓவியங்கை வந்த வொருவனைமுற் றுதமூலத்
தேவி மணாளன் றிருவுருவை—நீவகுப்பாய்

251 என்னப் படத்தி லிசைத்துவா வென்னலுமே
அன்னமன்ன தோழி யறிந்துசொல்வாள்—முன்னவன்றன்

252 வேணி யெழுதவல விஞ்சைகற்று னேனுமதிற்
பாணிதனை யெவ்வாறு பாணிப்பான்—மாணமைந்த

253 நெற்றி யெழுதவல்ல நேர்மைகற்று னேனுமதில்
உற்றகனற் கண்ணெழுத வொண்ணாதே—மற்றுமிரு

254 கண்ணெழுதக் கற்றானோ கற்றாலுந் தண்ணருள்கூர்
வண்ண மமைக்க வசமாமோ—உண்மகிழும்

---

246-7. எல்லாம் கரும்பு உருவ வில்லாள்-உருவமெல்லாம் கரும்பைப் போன்ற ஒளியையுடையவள்; வில்-ஒளி. கமல இல்லாள்-திருமகளைப்போன்றவள். கரு புருவ வில்லாள்-கருமையாகிய புருவ வில்லையுடையவள்.

248. தளிர் அன்ன கையாள். பணி மேல் நகையாள்-ஆபரணங்களால் மேலாகிய விளக்கத்தையுடையவள். புவி மேனகையாள்-பூமியில்வந்த மேனகை போன்றவள்.

249. தனித்து இல் இருந்து.

249-50. எழுதும் ஓவியம் கைவந்த ஒருவனை-ஓவியம் எழுதுவதில் தேர்ச்சிபெற்ற ஒருத்தனை; "ஓவியத் துறைகை போய வொருவனை" (நைடதம், அன்னத்தைக். 6.) வகுப்பாய்-எழுதுவாயாக.

251. என்னலும்-என்று மடந்தை சொன்னவுடன்.

252. விஞ்சை-வித்தையை. பாணி-நீர்; ஆகாயகங்கை. பாணிப்பான்-திருந்த அமைப்பான்; 118. மாண்-மாட்சிமை.

255 தோடெழுதக் வல்லனென்று சொன்னாலும் வீணைவல்லோர்
பாட விசைக்கப் படுவதோ—நாடிநின்று

256 செம்பவள வாய்வருத்துச் செய்தாலு முன்னதா
விம்பவளத் தேனருந்த வேண்டாமோ—கம்பரமன்

257 கந்தரம்போ லேயெழுதக் கற்றானே யானாலும்
முந்தச் சுருதி முழங்குமோ—வந்தவிஞ்சை

258 யாலிங்க னங்காங்க ளாவெழுதி னாலுமுன்னை
ஆலிங்க னஞ்செயலே யாரமைப்பார்—மாலறியா

259 நித்தன் திருமார்பு நின்றெழுதி னாலுமுன்மேற்
சித்த மகிழ்வதெனச் செய்யவல—வித்தகனே

260 தாட்டுணைகள் போலெழுதித் தந்தாலுந் தாண்மாறி
ஆட்டுவிக்கப் பாண்டியனா லல்லவே—வாட்டடங்கண்

261 மின்னே மணியே விளக்கே விலைமதியாப்
பொன்னேநால் வேதப் பொருளாவான்—தன்னுருவைத்

262 தூரிகையி னாலெழுதச் சொன்னதென்ன புத்தியத்த
நாரிதனைக் காணிலுள நாணாதோ—பேரறிஞர் 263-4.

---

255. தோடு-ஒருவகைக் காதணி. வீணைவல்லோர்-கம்பளர் அசுவதரர்; 65-ஆம் கண்ணிக்குறிப்பைப் பார்க்க.

256. அதர விம்ப வளத்தேன்-கீழுதடாகிய கொவ்வைக் கனியின் இனிமையுடைய தேனை.

257. சுருதி-வேதம்; இங்கே சாமகானம்; "சங்கணி குழையர் சாமம் பாடுவர்" (திருஞா. தே.); "மாமலர்த் தெரியலான் மணிமிடற் றிடைக்கிடந்த, சாம கீதம்" (சீவக. 2038); "தங் கண்ட, மீதலராத சாம வேதமார்ப் பவர்போல்" (திருவிளை. மாமனை. 23); தக்க. 610-ஆம் தாழிசையுரையின் அடிக்குறிப்பைப் பார்க்க.

257-8. விஞ்சையால் இங்கனம் காங்கள் எழுதினாலும்; இங்கனம்-இவ்வண்ணம். ஆலிங்கனம் செயலை-தழுவுதலை.

259. வித்தகனே; ஏகாரம் எதிர்மறை.

262. தூரிகை-எழுதுகோல். அத்த நாரிதனை-பாதி வடிவத்திலுள்ள பெண்ணை; என்றது உமாதேவியாரை.

263 அப்படிய னவ்வுருவ னவ்வணத்த னென்றறிவார்
இப்படிய னிவ்வுருவ னிவ்வணத்தன்—ஒப்புடையன்

264 ஆமென் றெழுதவல்லா ரியாரே மலரிதழித்
தாமந் தரித்தவிண்ணோர் தம்பிரான்—மாண்மியஞ்சேர்

265 உள்ளத்தி னுள்ளன் புடையார் கருத்தறியும்
வள்ளல் வலிய வருமென்னத்—தெள்ளமுத

266 வாரி பவள மலைபோன் மலையனைய
தேரின் வரமகிழ்ந்து சென்றணைந்து—பாரினின்று

267 கண்டா டுதித்தாள் கனிந்தாள்பே ராசைமேன்மேற்
கொண்டாள் பணிந்தெழுந்து கும்பிட்டாள்—எண்டிசையும்

268 கட்டிய தானைக் கருணா கரநிதியே
பட்டிமையில் லாருளத்தின் பாக்கியமே—புட்டிவிலே

269 ஐயம் படைத்தவனை லையா பரிகலத்தில்
ஐயம் படைத்தவர்போ லாயினேன்—மெய்யணியோ

---

263–4. "மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி மயானத்தான் வார்சடையா னென்னி னல்லால், ஒப்புடைய னல்ல னொருவ னல்லன் ஓரூ னல்லனோ ருவம னில்லி, அப்படியு மந்நிறமு மவ்வண் ணமும் அவனருளே கண்ணாகக் காணி னல்லால், இப்படிய னிந்நிறத்த னிவ்வண் ணத்தன் இவனிறைவ னென்றெழுதிக் காட்டொ ணாதே" (திருநா. தே.) இதழித்தாமம்–கொன்றைமாலை.

265. வரும்–வருவான்.

267–8. எண்டிசையும் கட்டிய தானை–திகம்பரம். பட்டிமை–பொய்; "பட்டிமையும் படிறுமே பேசுகின்றார்" (திருநா. தே.), "பாவகஞ் செய்து இட்டிப் பட்டிமை யோலை யுய்ப்பான்" (திருவிளை. 30:13.) புட்டிவில்–அம்பறாத்தூணியில்.

269. ஐ அம்பு அடைத்தவன்–ஐந்து மலர்ப்பாணங்களைச்செருகிவைத்தவன்; மன்மதன். பரிகலத்தில் ஐயம் படைத்தவர்போல்–பிச்சைப்பாத்திரத்தில் பலியிட்ட தாருகாவனமுனிவர்பத்தினிகளைப்போல. ஆயினேன் என்றது காமமயக்கங்கொண்டு ஆடைமுதலியவற்றை இழந்ததைக் குறிப்பிட்டபடி. மெய் அணி–முழு உடம்பாகிய ஆபரணம்; என்றது காயாரோகணத்திருவுருவத்தைக் குறிப்பித்தது.

270 டென்பணியுங் கொண்ட கிமய மடந்தையைப்போல்
என்பணியுங் கொண்டாலா ரேசுவார்—முன்புபச்சை

271 மாலையளித் தீரெனக்கு மாலையளித் தீரதற்கு
மாலையளித் தீரென்றால் வாழ்த்தேனே—சூல

272 தாரோ யெனவா தரத்தா லுரைக்க
வாதன் மனமகிழ்ந்து மற்றோர்—திருவீதி

273 சென்று நிவளூர் திருமனையிற் புக்கிருந்தாள்
நின்றாரிற் பின்னுமொரு நேரிழையாள்—நன்றிசைந்த

அரிவை.

274 மானை மருட்டிவரி வண்டைச் சிறைப்படுத்தி
மீனைப் பயமுறுத்தி விண்டலர்ந்து—தேனூர்

275 வனசத்தைப் பங்கமுற வாட்டிக் குவளை
இனசத் தாருவைவன மேற்றிச்—சினமா

276 வடுவை வடுச்செய்து வாருதியோ மேன்மைப்
படுமென் றதோகதியாய்ப் பண்ணிக்—கடுவினுக்கு.

---

270. என்பு அணியும்-எலும்பாகிய ஆபரணத்தையும். என் பணியும் கொண்டால்-என்னுடைய குற்றேவலையும் எற்றுக்கொண்டால்.

271. மாலை-திருமாலை. அளித்தீர்-காப்பாற்றினீர். எனக்கு மாலை அளித்தீர்-அடியேனுக்கு மயக்கத்தைத் தந்தீர். அதற்கு-அதனை நீக்குதற்கு. மாலை-பூமாலையை.

274. மருட்டி-மருளச்செய்து. சிறை-இறகு; சிறைச்சாலையென்பது மற்றொருபொருள். பயம்-நீர், அச்சம்; "உன் கண்ணோக்கி மீன்பயங் கொண்டலையும்" கோடீச்சுரக்கோவை, 23.

275. பங்கம்-சேறு, பழுது; "புங்கமுறு மம்புயத்தைப் பங்கமுற்ற தென்னவொளிர் முகத்தினள்" (சரபேந்திர. குறவஞ்சி, 11.) வனம்-தண்ணீர், காடு; தோற்றவர்கள் காட்டில் மறைந்திருத்தல் மரபு; "இனத்தினுடனும்ப லெழிற்போது தோற்று, வனத்திருக்க மன்னியசெவ் வாயான்" (பெருவுடையாருலா,185) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க. சின-சின்ன; சிறிய; "சின்னவிடைப் பாகா" காசிக்கலம். 79.

276. மேன்மைப்படும்-மேன்மையை அடையும், மேலே மேகம்பொருந்தும். அதோகதியாய்-ஆழமுடையதாக, தாழ்ந்தநிலையுடையதாக. கடு-விடம்.

277 நித்யகண்ட மேவு நிலைகொடுத்து வேன்முனைக்குச்
சத்தியிலை யென்னவெற்றி தான்கொண்டு—கத்தி
278 உறையிடக் காணாதென் றுயிரின் கொலைக்கு
மறலிதன்ம னாமெனப்பேர் வைத்து—விறலார்
279 உருவை யுடையா னுடைய கணைபோன்
றரிவை யுறுகண் ணரிவை—பருவமுற்றும்
280 நாளிகேரத்தினைத்தன் னல்லடிவீழ்த் திச்சக்ர
வாளத்தை யோட்டிநெடு வான்புகுத்தித்—தாளத்தை
281 ஒன்றொன்று தாக்கவிடுத் தோர்தாளிற் றாமரையை
நின்றிடெனத் தண்ட நியமித்துத்—துன்று

---

277. நித்ய கண்டம்-தினந்தோறும் கழுத்தில், தினந்தோறும் வரும் ஆபத்து. சத்தியிலை-வேலினது இலை, ஆற்றலில்லை; "சுத்தவீ ரத்தாங்கைத் துன்னுவடி வேலதனைச், சத்தியிலை யென்னுந் தடங்கணாள்" (பெருவுடையாருலா, 225), "வெற்றி வேலைநீ டிதுசத்தி யிலையென வேலை, சுற்று மாநிலஞ் சொல்வுறு துணைமத விழியாள்" திருவிடைமருதூர்ப்புராணம், தேவ விரதச். 24.

278. உறையிடக்காணாது-உறைக்குள் இட்டால் தோற்றாது, உறைக் கணக்கிடவும் பற்றாது; உறை-ஒருவகை எண்; "உறையிடத் தேய்ந்திடு மிவ்வந்தி வானத் தடுக்குலமே" (திருவேங்கடத்தந்தாதி, 34.) மறலி-யமன். தன்மன்-தருமராசன், கொலையே யில்லாதவன்; "கூற்றுவனை யாருங் குலவுந் தரும னெனச், சாற்றிடச் செய்யுந் தடங்கண்ணாள்" (பெருவுடையாருலா, 183), "தருமனெனக் கூற்றை யெவருஞ் சொல்லக் காத்த நயனத்தாள்" (சரபேந் திர. குறவஞ்சி, 11), "இயமனைத் தரும னெனவுயிர் வாட்டி ... ... ... இலகு மடக்கொடி கூர்விழி" திருவிடை. வரகுண. 73.

279. உரு-அழகு. உருவையுடையான்-சிவபெருமான். அரி வை உறு-அரிகளையும் கூர்மையையும் பெற்ற, திருமாலை வைக்கப்பெற்ற.

280. நாளிகேரத்தினை-தேங்காயை. சக்ரவாளத்தை-சக்கரவாகப் பறவையை; "சோணாடர் போற்றிய செம்பொற் றியாகர் துறைசைவெற்பிற், காணா மருங்குனின் பூணாக் கொங்கையைக் கண்டழிந்த, நாணாற் புவியி லொருவர் தங் கண்ணுக்கு நண்ணரிதாய்ச், சேணார் விசும்பிடைச் சக்கர வாகந் திரிகின்றதே" திருவாவடுதுறைக் கோவை, 22.

280-81. "மாயைமுலைக் கிணையெனவென் மூன்றானும் வந்ததென வலக்கைத் தாளம், போயிடக்கைத் தாளமதைப் பொறாமையினாற் றாக்குதல் போற் புடைத்தொலிப்ப" (பிரபுலிங்கலீலை, மாயைபூசனை. 50.) தண்டம்-தண்டனை.

282 கரியைக் கிரிவைத்துக் கன்னிகா ரத்தைத்
தெரியலர்தூற் றச்சிறுமை செய்து—பரிய

283 மணிச்செப்பை வாயடைத்து வைத்த பணியுள்
தணிச்சொப்பில் கூவிளத்தைச் சாலக்—கணிப்பரிய

284 வித்தையுள்ள வெல்லாம் வெளிப்படுத்தக் கண்டுசிவ
பத்த ரிடத்திருக்கப் பாலித்து—மொய்த்தமலர்ச்

285 செண்டைப் புலர்த்தித் தினகரர் சூழ்ந்திடும்வே
தண்டத்தைப் போரிற் றலைமடக்கி—கண்டித்

286 திணைத்திறுகி விம்மி யிறுமாந் திளகிப்
பணைத்துத் திதலை பாந்து—துணைக்கண்

287 கறுத்து வெளியிடையிற் காணு திடையை
ஒறுத்துப் புனைகச் சுவந்து—மறுப்படாச்

288 சந்தந் திமிர்ந்து தாள வடம்புனைந்து
கந்தங் கமழுங் கனதனத்தாள்—அந்தரத்தின்

289 என்றடுத்து வந்தாலு மென்றுவந்தீ ரென்றெதிர்த்து
நின்றடுத்துக் கேட்குமிரு ணோர்குழலாள்—வன்றிறல்சேர்

---

282. கரி-யானை. கிரிவைத்து:தோற்றவர்கள் மலையை அடைவது மரபு. கன்னிகாரத்தை-கோங்கரும்பை. தெரியலர் தூற்ற-யாவரும் தெரியும் மலர் களைப்பொழிய, பகைவர்கள் பழிக்க. பரிய-பருத்த.

283. வாயடைத்து-வாயை மூடி, பேசாமலிருக்கச்செய்து. பணியுள் தணிச்சு-ஆபரணங்களை அதற்குள் தங்கச்செய்து, குற்றேவலில் அடங்கச் செய்து. கூவிளத்தை-வில்வக்கனியை. கணிப்பு அரிய-அளவிடுதற்கரிய.

284. வித்தை-விதையை, கல்வி, வில்வக்குடுக்கையைத் திருநீறுவைத் துக்கொள்ளுதற்குச் சிவனடியார்கள் பயன்படுத்திக்கொள்வார்கள்.

285. புலர்த்தி-வாடச்செய்து. தினகரர்சூழ்ந்திடும் வேதண்டம்-மேரு மலை. தலைமடக்கி-வளையச்செய்து, வெட்கத்தால் தலைகுனியச்செய்து; அது வில்லானபோது வளைந்தமை இங்கே அறியற்பாலது.

286. திதலை-தேமல். 288. சந்தம்-சந்தனம்.

289. என்று-சூரியன். என்று வந்தீர்:ஒருசமயத்தில் பாம்பு கருடனை நோக்கி, 'சுகமா' என்று கேட்டதை இது நினைப்பிக்கின்றது. காஞ்சிப். பணுதரீச். 5.

290 அங்கோல மாரவே ளாக்கினையுஞ் சக்கரமும்
செங்கோலும் போன்ற திறலினள்—பொங்குகதிர்ச்
291 சித்ரமணி மேடைதனிற் சிங்கா தனத்திருந்து
வித்தாரப் பாடல் விறலிக்கு—முத்தாரம்
292 பூந்துகில் சந்தம் புனைய வளித்துமகிழ்ந்
தேந்திழையே முன்னு ளிசைவாது—சாய்ந்திடவே
293 எம்பிரான் கூட லிறைவனரு ளாற்செயித்த
கும்பமுலை மாமயிலே கூறக்கேள்—உம்பரிலே
294 வீரங் கருணை மிகுந்த சவுந்தரமும்
சேருங் கடவுளர்யார் செப்பென்ன—ஆர்வமுடன்
295 வீணை யிடந்தழீஇ மென்மா டகந்திருத்திப்
பாணினியு மின்னிசையாற் பாடுவாள்—ஆண்மைமிகு
296 காமன் புரத்தைக் கருதார் திரிபுரத்தை
மாமன் சிரத்தைமல ரோன்சிரத்தை—ஏமமுறு
297 அந்தகனை யந்தகனை யாதி யடையலரை
முந்தத் தடிந்த முறைகேட்கின்—விந்தையாம்
298 பார்த்து நகைத்துப் பரிகரித்துக் கிள்ளியுதைத்
தார்த்துவெகு ளாதவிளை யாட்டமரை—நேர்த்திடவே

---

290. "அலகில் சுரபதி மதனர்க ளரசிவர் அவர திகிரியு மனிகமும்...... இவர்" (தக்க. 38) என்பதையும் அதன் உரையையும் பார்க்க.

292. சாய்ந்திட—தோல்வியுற.

292-3. விறலியைப் பாணபத்திரர் மனைவியாகவே எண்ணிக் கூறியது; இங்கேகூறிய வரலாற்றைத் திருவிளையாடற்புராணம் இசைவாதுவென்ற படலத்தா லறியலாகும்.

294. சவுந்தரம்-அழகு. என்ன-என்று அரிவை கேட்ப.

295. மாடகம்-முறுக்காணி. பாணினி-விறலி.

296. புரத்தை-சரீரத்தை. மாமன்-தக்கன். ஏமம்-இன்பம்.

297. அந்தகனை-யமனை, அந்தகாசுரனை. ஆதி அடையலர்-முதலாகிய பகைவர்; என்றது யானை, சலந்தரன் முதலியவர்களை.

298. பார்த்தல் முதலியவற்றை நிரனிறையாகக் கொள்க. விளையாட்டமரை-விளையாட்டுச்சண்டையை. நேர்த்திட-ஒக்க.

299 எத்தேவர் செய்வா ரிஃதேவ ரான்முடியும்
அத்தேவ ரெல்லா மடலுற்றால்—மெய்த்துணைகள்

300 கூடுவா ராயுதங்கள் கொள்வார் சமரினுடைந்
தோடுவார் மீள்வா ருடற்றுவார்—நாடரிய

301 வஞ்சனையால் வெல்வார் மறுத்தக்காற் செய்வதென்னென்
றஞ்சுவார் வீர மறியோமோ—பிஞ்சும்

302 அரிபிரம னேனுமுன மாணவமுற் றாரேல்
அரிய னரியதவத் தன்பர்க்—குரியனென்று

303 சொல்லுவது நிற்கமுனர் தும்பி சிலந்திபாா
வல்லமையில் லாதகய வாய்நமக்கும்—வெல்லமரில்

304 அன்னை யிழந்த வடலேனக் குட்டிகட்கும்
என்னையோ ரிக்கு மெறும்புக்கும்—தன்னிடத்தில்

305 அன்புதவி யென்று மழியாப் பெரும்பதவி
பின்புதவி யாள்கருணைப் பெம்மானும்—நம்பான்காண்

306 பெண்கண்மயக் கற்றதவப் பேறிவு தானிழந்து
பெண்கள் வடிவெடுத்துப் பேரெழில்கண்—டெண்களிப்பி

307 னாலே யொருபதினா றாயிர மாமுனிவோர்
மாலாய்ப் புணர்ந்ததிரு மாலேபெண்—பாலாய்

---

299. இஃது எவரால் முடியும். அடலுற்றால்-சண்டைசெய்யப்புகுந்தால்.

296-303. இவற்றில் வீரம் கூறப்பட்டது.

303. இனி, கருணை கூறப்படும். தும்பி-யானை. அரா-பாம்பு. தும்பி முதலிய மூன்றும் பூசித்துப் பேறுபெற்ற தலம் காளத்தி. தும்பி சிலந்தி இரண்டும் பூசித்துப் பேறுபெற்ற தலம் திருவானைக்கா. தும்பியென்பதற்கு வண்டென்று பொருள்கொண்டு அது பூசித்துப் பேறுபெற்றது ஸ்ரீசைலம், திருவண்டுறை எனக் கொள்க. பாம்பு பூசித்துப் பேறுபெற்ற தலங்கள்: திருக்குடந்தைக்கீழ்க்கோட்டம், திருநாகேச்சரம், திருநாகைக்காரோணம், திருப்பாம்புரம், திருப்பாம்பணி, திருச்சேறிச்சரம் முதலியன. கயவாய்-சரிக்குருவி; இது பேறுபெற்ற தலம் திருவாலவாய்.

304. ஏனக்குட்டி-பன்றிக்குட்டிகள்; இவற்றிற்கு அருள்செய்தது திருவாலவாயில். ஓரி-நரி; நரி அருள்பெற்ற தலம் திருக்குற்றாலம். எறும்பு அருள்பெற்ற தலம் திருவெறும்பீச்சரம்.

308 மருவி னிமவான் மருக னழகுக்
கொருவரிணை யாவாரு முண்டோ—பொரும்விசய

309 வீரப் பெருக்கழகன் மென்கருணைச் சீரழகன்
ஆரத் திருமேனி யாரழகன்—ஓழகுக்

310 கெவ்வளவு மீச னிணையிலியென் றேயுரைக்கும்
அவ்வளவிற் பல்லியத்தி னார்ப்பரவம்—கொவ்வையிதழ்

311 மாது செவியுறலும் வந்ததுதே ரென்றெழுந்தாள்
நாத னடிபணிந்து நாடியே—சீதமலி

312 காவெல்லா மாரன் கணையே கணைமுதிரும்
பூவெல்லா நாணின் பொருத்தமே—மேவுவயல்

313 மேடெல்லா மன்மதன்கை வில்லே குடியிருக்கும்
வீடெல்லாஞ் சேனை விளக்கமே—கூடும்

314 இரவெல்லாம் வேள்களிற்றி னீட்டமே கொல்லைப்
பரவெல்லாம் சொல்வரம் பரியே—தரணியிலே

315 எங்கெங்கே பார்த்தாலு மென்னவெளி கண்டவிடத்
தங்கங்கே தேரு மவனுமே—சங்காரே

316 தேவரீர் சித்தந் திரும்பின விக்கணமே
யாவு முறவா யிணங்குமென்று—பாவை

317 புகலக் கடைக்கணித்துப் போந்துபின்னோர் வித்
திகழ வதிலோர் தெரிவை—மகிழும்

தெரிவை.

318 அயிலு மயிலு மனமுங் கனமும்
குயிலும் வடமுங் குடமும்—இயலும்

306-8. இவற்றில் அழகு கூறப்பட்டது.
309. ஆரம்-சந்தனம்: முத்தமாம்.
310. ஆர்ப்பரவம்: இருபெயரொட்டு. 312. கா-சோலை. நாண்-வண்டு
313. வில்-கரும்பு. சேனை-பெண்கள்.
314. களிறு-இருட்டு. பரவு-பரப்பு. பரி-கிளி.
315. தேர்-தென்றல்.
318. அயிலும்-வேலும். அனம்-அன்னப்பறவை. கனம்-மேகம்.
ஆலிலை. குடம்-கும்பம். இயலும்-அசைகின்ற.

திண்டிறற் கருட னுதியர் நீட்டுந்
திருவடிக் கமைந்தபீ டமதாய்
அண்டர்நா யகனு மமலனு னந்த
னருட்குணன் பராபர னிருப்பான். (ககஙு)

இவையொன்பதுந் தொடர்.

816 கழிபெருங் காமர் கவின்புது வதுவாய்க்
காண்டொறுங் காண்டொறும் வியப்பாய்
விழிகளாற் களிப்பா ரெண்ணில்பல் கோடி
மேதக வதனையே துதிக்கு
மொழிகளாற் களிப்பா ரெண்ணில்பல் கோடி
மொழிகளா ரமிர்தமாய்ச் செவியே
வழிகளாய்ப் புகுத மனக்கொடு களிக்கும்
வானவ ரெண்ணில்பல் கோடி. (ககச)

817 ஆடுவா ரனந்த [1]மவரொடுஞ் சுகானு
பூதியா வேசா யவன்சீர்
பாடுவா [2]ரனந்தங் கருணையங் கடலாம்
பராபரன் றிருவடி முடிமேற்
சூடுவா ரனந்த [3]மவர்கள் பொன் னடியிற்
றுளங்குபொன் முடியுறீஇச் சுகமே
கூடுவா ரனந்த [4]மிருந்தனு பவிக்குங்
குணவத ரனந்தகோ டியரே. (ககரு)

818 சீதா முகுந்த நாரண பரம
சிற்குண தேவதே வேச
மாதவ கருணு கரசுகா நந்த
வாமன வெனப் புகழ்ந் தனாய்த்
தாதள வியதண் ணறுமலர் பலதூய்த்
தடக்கைபொன் முடியுறக் கூப்பி
வேதவாய் மையரா நித்தரா தியர்தாம்
விளம்புபல் லாண்டோசி யினெடும். (ககசு)

[ஸ்ரீ-ம்.] [1]ரவரொடுஞ், [2]ரனந்தர், [3]ரவர்கள், [4]ரிருந்தனு பவிக்கும். சா.

819 அந்த வேலையினவ் வயின்மணித் தூண
மாடையா பரணநீ டலங்கல்
சந்ததங் கமழ்சந் தனச்செழுங் களபந்
தாளவெண் கவிகைசா மரைகண்
மந்தமா ருதமே யிறைத்திடுஞ் சிவிறி
வளமணித் தீபமா தியவுஞ்
சுந்தரக் கடகத் தடக்கைகூப் பினவாய்த்
துதிசெய்பல் லாண்டொலி மிகுமே. (கள)

820 இன்னணங் களிகொண் டிமையவர் நாப்பண்
ணிறையும்வெள் ளிடையிலா தீண்டப்
பொன்னெடுஞ் சிகர வரைபுரை தடக்கை
பொலிவுறப் பிரம்புபற் றினனுத்
துன்னரும் புலங்க டொறுநெருக் ககற்றித்
துணையடி தொழுதுபோற் றியபின்
பன்னருஞ் சிறப்பிற் சேனையர் முதல்வன்
பராபர வெருபாக் கெனலும். (ககஅ)

821 ஒருதனிப் பிரம நானல தில்லையென்
றுந்தியி லுதித்துளா னுளத்தாற்
கருதுமவ் வளவிற் சுருதியைப் பொருது
கவர்மது கயிடவ ருயிரைப்
பொருபுன லதனுண் மீனமென் றுறுத்த
புனிதனைப் புதல்வன்வேண் டலுமவ்
வருமறை யினையோ திமமென வருளு
டகாடிப் பவர்பல ரொருசார், (ககசு)

822 தீமையென் பதனை மனக்கொளா விபுதர்
தினைத்திடத் துறக்கமே புரந்த
தோமயர் வறப்பாற் கடல்கடைந் திடவுங்
குன்றம தலம்வரத் திணிந்த
பூமய மிடிந்தாழ் பொழிலினைப் பொருப்பைப்
பூண்டுறப் பொறைபுரிந் தெடுத்தற்
காமையா யமிர்தன் றருள்பரா பரனா
டகாடிப் பவர்பல ரொருசார், (கஉ0)

823 மண்படைத் தகில வுயிர்குடி புகுதும்
வடிவெலாம் படைத்துளா னேரெண்
கண்படை புரிகங் குலினெழு புனலுட்
கனகரேத் திரன்கொடு காந்த
பெண்படைத் துளநோய் தவிரவே மைதாய்ப்
பிறைமருப் பினிற்கொணர்ந் துசித
நண்படைந் துளநன் கலையவட் குணர்த்து
நடைநடிப் பவர்சில ரொருசார். (௧௨௧)

824 ஆணிதே யெமக்கென் றரிநமோ நாரா
யணுவெனும் புதல்வனை வெறுத்தன்
றிரணியா நமவென் றுரையென வுரையா
னெதிரிறை யெங்குளா னெனலும்
தாணியெவ் வுழியு முளனெனப் புடைத்த
தறியிடை நாரியென் றுதித்தம்
மூரணியல் கனகற் கிறுதிநா ளளித்த
முறைநடிப் பவர்சில ரொருசார். (௧௨௨)

825 காமனன் சுவற்கன் தனுதெனப் புரக்கக்
கணக்கில்வா னவர்துயர் காக்க
வாமன னெனமா வலிமுனஞ் சென்றே
மகத்திடை மூவடி யளவைப்
[1]பூமன னயர்ந்து தருகெனத் தடுத்த
புகரினை வெறுத்தவன் புரப்பத்
தாமனன் பதிமேற் றுயதாண் டவங்கூத்
தரினடிப் பவர்சில ரொருசார். (௧௨௩)

826 கூர்த்தவீ ரியச்செஞ் சுடர்த்திகி ரியினுங்
குறிப்பினுன் முன்னைநாட் கடைக்கண்
பார்த்தவீ ரியம துடைமையா வேசப்
[2]பாசிரா மன்பிதா வினைக்கொல்

---

[பி-ம்.] [1]பூமன நயந்து, சா. [2]பாசுராமன், சா.

கார்த்தவீ ரியன்மூ வெழுதலை முறையுங்
கடிந்திழி குருதியுட் குளித்தன்
றூர்த்தவீ ரியநா டகந்தனைக் களிப்புற்
றவணடிப் பவர்சில ரொருசார். (கஉச)

827 கோசலை வயிற்றிற் றூசா தியுமாய்க்
குனிசிலை யொடித்திரா வணன்செய்
பூசலை முடித்தாங் கவனுயிர் குடித்துப்
பொனங்கொடி யொடூர்தடந் தேர்மேற்
றாசலைப் புவனம் புகழயோத் தியுளாஞ்
சுடர்நடித் ததனையே முதனூல்
பேசலை மனத்தாற் கடைப்பிடித் திடுமன்
பினினடிப் பவர்சில ரொருசார். (கஉரு)

வேறு.

828 நாத மயமாஞ் சுருதியினை நாளு நயிமி சாரணியச்
சாதி முனிவர்க் குரைப்புழியா சனமீ திருந்தே தனையிகழ்ந்த
சூத பவுரா ணியனைமிகத் தொடர்ந்து படர்ந்தபெலப்படையாற்
சேத மதுசெய் மூத்தபிரான் செயலே நடிப்பர் சிலரொருசார். ()

வேறு.

829 வெண்ணையே தொடுவுண் டதுவுமோர் குறையாய்
மெல்லியல் வேதநூல் விரிவி
னெண்ணையே கடந்த சோதிமா னுருவை
யிழைகளீ ரிரண்டுடைத் தாம்பாற்
பண்ணைசேர் மடவார் நடுவண வரலும்
பண்டியு முடக்கியே பிணிப்பக்
கண்ணையே பிசைந்தன் றழூஉட மிறைவன்
கண்ணடிப் பவர்சில ரொருசார். (கஉஎ)

830 பருமணிக் கலசத் துறைத்தவெண் டயிரைப்
பட்டிமை யிற்பரு கினனென்
றருகமைந் தயலா ருரைப்பவே யசோதை
யருளிலா தவரின்மத் தெடுப்ப

விருகுழை யவற்றை யிருகையான் மாறி
யேந்தியே நின்றிருந் தெழுமத்
திருநட மதனைத் தேவர்கோன் மதிப்பத்
தினநடிப் பவர்சில ரொருசார். (கஉஅ)

831 காலதர் நுழையாப் பாலனை [1]முதலே
கடத்தியுட் புகுந்து தன் கழற்கப்
பாலணு தார சிலையெனக் கிடப்பப்
பாலும்வெண் ணெயுமுறி தடவி
வாலனோ டருந்திப் பசிதணிந் திடாதாய்
மாதரார் வரும்வழி யதன்கட்
சீலமே செலவுஞ் சிங்கரோக் கமர்செய்
திறநடிப் பவர்சில ரொருசார். (கஉகூ)

832 வடுத்தனைப் பிளந்து வைத்தபோ லிணைந்த
வடிவம ருண்கணார் தொடிக்கை
தொடுத்தெழுங் குரவை யதனொடுந் திணிந்து
துளும்பும்வெண் டயிர்க்குடம் பலவா
யடுக்கியொன் றினொடொன் றணுகிடா தணுகு
மவற்றையே யெதிரெதிர் நடந்தாங்
கெடுத்தெடுத் தெறிந்தேர் தியகுட நடனென்
றிவைநடிப் பவர்சில ரொருசார். (கநூ0)

833 புளகித களபப் புணர்முலை மடவார்
புனல்படிந் திடவிடு கலையைக்
களவினிற் கொடுபோ யுழியவர் தொடாக்
கவடுபட் டோங்கிய குருந்தி
னிளவா செனவிற் றிருந்திளந் தளிரீந்
திடுநடத் தினைச்சிறைப் புறத்தாய்
அளவளா யாடுஉ மகடுவாய்த் தமிநின்
றயனடிப் பவர்சில ரொருசார். (கநூக)

[பி-ம்.] [1]முன்னே. சா.

834 கவலையா துமிலா னவர்நா டிழந்த
கவலையுங் காவிகள் கடுங்கற்
றிவலையே பொழிமா ரியினுறு துயருந்
தீர்த்திட வுதித்தநாட் டிரைபோற்
றுவலைகூ ருபய கவுண்மதக் கலுழித்
துண்டவெண் பிறைமருப் பொருகைக்
குவலயா பீடத் துயிரினைக் குறைத்த
கோலனடிப் பவர்சில ரொருசார். (கூஉ)

835 பட்டிமைக் கஞ்சன் வாயிலிற் கவடு
படுபணைப் புயங்களிற் றுணைக்கை
கொட்டியு மிடியே றெனமுழக் கியும்வன்
கூருகிர் விரல்களை மடக்கு
முட்டியி னெதிர்தண் டியுமயிர் மழித்த
முடிபின்முட் டினர்களாய்ச் சேர்ந்து
கட்டுமல் லரைக்கோல் கைக்கதி மாக்காற்
கதிநடிப் பவர்சில ரொருசார். (கூஙு)

836 பூவினன் முகனெப் பொருளெனத் தெருள்வான்
பொதும்பர்சார் பொருப்பின்மேய்த் தவண்வா
மூவினுங் குழக்கன் [1]றினந்துணைப் புதல்வ
ராவழைத் திடுகுழல் கடைகா
லோவிலாக் கடைதாம் புடன்கொடு போக
வொருங்கவை யவர்களா மமைதித்
தேவினு டகத்தைச் சீதரன் றிருமுன்
றினநடிப் பவர்சில ரொருசார். (கூச)

வேறு.

837 கற்பாந் தியத்திற் செருக்கமைந்த கலகச் சமயத் தவர்சிரத்தைப்
பொற்பார் தகடு படுகூரத்தாற் பொடித்துக் கடித்த பதுவாயாற்
சொற்பா வலர்தம் மிருசெவிக்குச் சுகமே விளைக்கு மமுதநிகர்
நற்பா கிறைக்கு மயக்கிரிவ னடமே நடிப்பர் சிலரொருசார். ()

[பி-ம்.] [1]றினர்.

வேறு.

838 இத்திறத் தனவாம் பலவகை நடங்க
ளியலிசை யதற்கதற் கிசைந்த
வித்தகப் பாணி யபிநய மியங்கள்
மெய்யினாற் கையினாற் பதத்தா
லுத்தம விழியாற் காமர்வா ணகையா
லுசிதமாம் படிநடித் தனராங்
தத்துநீர் விரசை தனைக்கடந் தேயர்
தாமம தடைந்தமுத் தரையும். (கஙசு)

839 முனிவரே திகளா முதல்வர்வெண் மதிகால்
முதன்மறை மகம்பொரு ளுரைபுட்
டனியற மனந்த கணமுழு நிதியஞ்
சத்திய மச்சுதந் தகைசா
னனியுணர் வடைந்த சேனைகா வலனு
நாதனு தியவரையு நோக்கி
யினியுபுன் முறுவ லுடன்முக மலர்ந்தாங்
கிறைவனுண் மகிழ்ந்துவீற் றிருப்பான். (கஙஎ)

இவையிரண்டுந் தொடர்,

வேறு.

840 இருந்த காலையி லிறைவனின் னெழிலிறை வனதாய்ப்
பொருந்து பேருணர் வையுங்குழைத் திடுபுது வதுகண்
டருந்து மாரமு தெனக்களிப் பவர்களன் பவர்பாற்
றிருந்து பேருணர் வையுநிலை திரித்திடுந் திறத்தால், (கஙஅ)

841 தேவ ராதிய வுயிர்களுக் குயிர்களாய்ச் செறிந்த
காவ லாளனுக் கொருபகை யுளதுமாய்க் கருதி
பாவ நெய்துமென் றறிவரி தெனவெதிர் குறித்தம்
மூவர் கோனையுங் காப்பரைம் படைகளா முதல்வர். (கஙகூ)

இவையிரண்டுந் தொடர்,

842 பூப திக்கதி லாண்டமும் பூத்ததோர் பதும
நாப னுக்குறு காப்பமைப் பவரென நயந்தே
தீப மேந்துவர் சிலர்சிலர் தாமதன் பின்னர்த்
தூப மாதிய வேந்துவர் சிலர்பலர் துதிப்பார். (கசO)

843 உண்மை ஞானமே யொன்றின ரித்திறத் துதவும்
வண்மை யானவை மதியிலார் மதிநிலை பிறழ்ந்த
வெண்மை யாமெனக் கருதுவர் வெண்மையன் றுண்மைத்
திண்மை யாமென மகிழ்வுறு மவன்றிரு வுளமே. (கசக)

வேறு.

844 சீதரன் றிறங்கள் யாவுந் தெற்றென வுணர்ந்த செவ்விப்
போதசிற் சொருப மாகிப் புகலமெய் புளகங் கூர்க்கு
நாதகீ தத்தி னுண்மை நடைபயின் றுழுகுஞ் சாம
வேதபா ராய ணஞ்செ யமலையே மிகுந்த தோர்பால். (கசஉ)

845 சிற்குண திகளுஞ் செவ்விச் சீதரன் செவிக ளாரத்
துற்றுதெள் ளமிர்தா மெய்ம்மைச் சுருதிநன் மிருதி யோடும்
பொற்புறு குழலும் யாழும் பொறைவலம் புரியு மெண்ணில்
கொற்றமா தியவா மூன்று முரசமுங் குளிறு மோர்பால். ()

846 யாவரும் யாவும் வீயு மிறுதிநா ளுயிர்கட் கெல்லா
மேவரும் படிவ மீன்ற விரிஞ்சனே முதலாய் நின்ற
மூவரு ளொருவ னாகி முதற்பெருங் கடவு ளாய
தேவர்தே வேச வென்றே சின்னங்கண் முழங்கு மோர்சார். ()

847 பிறப்பிறப் பென்ப தில்லாப் பெற்றியாய்ப் பிறந்தா னாகி
யிறப்பவ னாகி மாயை யியற்றுதி யெங்கு நிற்றி
யறப்பொரு டெரித லாற்று வாற்றலா யறிவ தாருன்
சிறப்புடைத் திருட்டி யென்றே சின்னங்கண் முழங்கு மோர்சார்.

848 நீணிலத் திருத்தி யென நிழன்மருப் பொன்றி னூன்மூன்
றிணிலத் திலக்குங் கேழாய்க் கிளைமிலத் திருத்தி வானோர்
வாணிலத் திருத்தி யாருன் மாயையின் கறிவார் மாயாச்
சேணிலத் திருத்தி யென்னுஞ் சின்னங்கண் முழங்கு மோர்சார்.

849 கரங்களாற் போது தூய்நின் கழல்பணிந் தவரை யுட்கொள்
வரங்களா மெனவே யொண்பொன் மகுடமீ திருத்திக் கையா
லுரங்கொளா முபந்த வாய்நின் னுண்மையா ரறிவார் தேவர்
சிரங்கண்மீ திருத்தி யென்றே சின்னங்கண் முழங்கு மோர்சார்.

850 வனசரோ ருகத்திற் றோன்று மாதையே சீதை யென்னுஞ்
சனகனர் புதல்வி யாக்கித் தாசா தியுசீ யாகி
யனகனே கானிற் போந்த மறையெவ னலகில் சோதித்
தினகரோ தயனே யென்னச் சின்னங்கண் முழங்கு மோர்சார். ()

வேறு.

851 வருணன்மேற் றூரந்த கணையளக் கரைபு
மார்ந்தியே வடவையைப் பருகுங்
கருமமொன் றுணர்ந்தா யக்கணை யிலங்கைக்
கடிநக ரொடுமரக் கரையு
முருமெனச் சுடுமால் வெள்ளமோ ரெழுப
துடன்கருங் கடலினை யடைத்தே
செருவினை விளைத்த திறமெவ னெனும்பொற்
சின்னங்கண் முழங்குவ தொருசார். (கசுகூ)

852 மருந்தினைத் தரும்பாற் கடலுனக் கிருப்ப
வடிதயி ரினைத்தொடு வுணவே
பொருந்திய தெவனப் பிழைக்குறா விடைநாண்
பூட்டிய பொழுதினி லழுதே
யருந்துதி யெனவா முசோதைமத் தெடுப்ப
வருமணிக் குழைபிடித் தாடத்
திருந்திய திறமெத் திறமென மிளிர்பொற்
சின்னமே தழங்குவ தொருசார். (கடுய)

வேறு.

853 தாணுவா யவர்கள் யாருந் தமனியப் பூவை மார்பிற்
பூணுவாய் சொப்போ தென்னப் புனிதமுத் தரையும் போற்றல்
பேணுவாய் நினக்கு நீயே நிகரெனும் பெற்றி சாற்றி
வேணுவாய் வைத்த நாத நிதமே விளைப்ப சோர்சார். (கடுக)

854 திருவிலாத் தேவர் தம்மைத் திருவிலாத் தேவ ரென்றே
கருவிகால் வேதங் கூறக் கேட்டிலோர் காமர் கண்ணுற்

பொருவிலாத் திருவி னோடும் பொருந்தினன் சொருபத் தாலவ்
வுருவினாற் கவினக் கண்டே யொருங்குதாம் நடிப்ப ரோர்சார். ()

855 கடவுளர்க் கமைந்த கானங் கருவியான் மிடற்றாற் பாணி
படரியல் வழாது காமர் பண்ணுறீஇப் பாடலோடுந்
தொடர்புடை யனவாய்த் தேவர் துந்துமி துவைப்பச் சுத்த
நடனவின் னெழுகுந் தெய்வ நங்கைமார் குழீஇய தோர்சார். ()

வேறு.

856 நுணங்கு கேள்வியர் நுண்புல வுழைந்துணர் வரிதாங்
குணங்க ளாயிரம் பெயர்களா யிரம்பயில் கோமாற்
கிணங்கு தேவிய ரிண்டையா சனத்துவீற் றிருக்கு
மணங்கொ டாய்மகன் மண்மகன் முதல்வரா யிரரே. (௧௫௪)

857 வாய்ந்த சேனையர் முதல்வனிற் சூத்திர வதிசீர்
தோய்ந்த பன்னக வயிரியி லுருத்திரை சுகீர்த்தி
சாந்த மேவிய வனந்தனிற் கெழுதகை சான்ற
காந்தி வாருணி யாமென முந்துநூல் கழறும். (௧௫௫)

வேறு.

858 சிறப்ப வாழ்வுறு மவரொடங் கிருந்துவெண் டிரைத்தீவி
லறப்ப யன்றெரி யாவுயிர் களையெடுப் பதற்காகப்
பிறப்பி றப்பொடுந் திரிதரு மமலனெம் பெருமான்பேர்
மறப்ப ரோமதி மறப்பிலா தவர்களுண் [1]மதிபெற்றோர். ()

859 புரைக்க ராசல மூலமென் றுரைக்கவே புனலோடைக்
கரைக்க ராமுயிர் நேமியாற் பருகிய கதிநாடிற்
றிரைப்ப யோததி யராவணைத் துயின்றவன் றிருநாம
முரைத்தி ராமனு மறப்பரோ நகநல முடையோரே. (௧௫௭)

860 குறித்த பாரதப் போரினிற் றனஞ்செயன் குறித்தேமுன்
செறித்த போதரன் வேணியிற் காட்டிய திறநாடி
லெறித்த செம்மல ரம்மலர்த் தாளினில் யாரேனும்
பறித்தி டாமலு மிருப்பரோ கைத்தலம் படைத்தாரே. (௧௫௮)

861 பொருவி லானரு டலைமையைத் தவிர்த்ததென் புகல்வேனோ
வுருகு வாருயிர்க் குருகுவா யெனவுரு குவதாக்கிப்

[பி-ம்.] [1]மதிபெற்றோய். ௬.

பருகு வாரின்மெய் யுறத்தழு வெனப்பயிற் றியதோடுஞ்
செருகு பூவென வுயிர்களைச் செறித்தது சிரமீதே. (கடுக)

862 படியிற் றீர்ந்தெழு முத்தரு நித்தரும் பணிந்தேதன்
னடியிற் றோய்ந்தெழுங் கடன்கழிப் பானென்று மதுபோலு
மடியிற் காமுற வைத்தபின் மார்புற வமைத்தேபொன்
முடியிற் றோய்ந்தவன் முயங்கிய நயம்பயின் முறைதானே. ()

863 பரவு மைந்தரென் னிறந்தவ ரொடும்பழ கினனாகி
விரவு தாதைசெய்த் தாயமைந் தரைவிரும் புவபோலு
முரவு நீர்சுலா முலகுயிர் வான்பதத் துறுங்காமர்
வரவு பார்த்தருள் பொழிவிழி யினைவழி யினில்வைப்பான். ()

864 கண்ணிற் கண்டுகேட் டுண்டுயிர் களித்திடக் கருத்தான்மெய்த்
தெண்ணத் தான்றெவிட் டாதவின் னமிர்தமொத் தினிதாகு
மண்ணற் காட்செயா தெவன்கொலோ பிறர்க்குல கடுந்தீநஞ்
சுண்ணத் தான்றுணிந் தவரினுட் செயத்துணி வுறுமாறே. ()

865 விருப்பு ளானெனில் வெறுப்புளான் சுவணமா மேருப்
பொருப்பு ளாகிய பூர்த்திய னானுவினுட் புகுந்த
திருப்பு ளானிரு நிலத்துளான் புனலுளா னிடைகூர்
நெருப்பு ளான்கடுங் காலுளா னெடுவிசும் புள்ளான். (கசுரு)

866 கால மும்மைய வன்றியே கணமுதற் கணிப்பாகும்
பால வின்றியும் பழவினைப் பயன்றொடர் படிறாட்டுஞ்
சீல மன்றியு மதன்வயிற் செறிந்தசெம் மையர்வேறோர்
ஞால மென்பதி னசையுறு நசைதரு நசைத்தாமே. (கசுசு)

வேறு.

867 பரமபத மந்தாமம் பரந்தாமம்
பரமேட்டி பரமா காயந்
திரமமிர்தம் வைகுந்தம் வைகுண்டம்
விண்டுபதந் திவவி யோம
மாநயனென் பவர்பதவிக் கப்புறத்தப்
புறத்தாகு மயோத்தி வீடென்
றானுடையோ ரிடுகுறிகா ரணப்பெயரோ
டுலப்பில்பெய ருடைய தாமே. (கசுஎ)

ஆறவது பரமபதவருணனைச்சருக்கம் முற்றும்.

---

ஸ்ரீ:

## எ. [1]அண்டவுற்பத்திச் சருக்கம்.

868 தெண்பா லருந்த விரும்பினர்க்குத்
தெவிட்டா வமிர்தந் தமதெனப்பாத்
துண்பான் றமிவந் தடைந்ததெனு
வுணர்த்தற் கரிதா மருமறைநின்
னன்பா லுணர்ந்தின் னுயிர்தளிர்ப்பான்
ஞானு திகம்பெற் றனன்புவனப்
பண்பாய்ந் துரைத்தி யெனப்பதினெண்
பனுவற் புனிதன் பகர்தருவான். (க)

வேறு.

869 ஆதிகே சவனு லமர்பிர கிருதி
யாதிவே தியன்றனக் கமைநா
ணீதியாற் கழிந்த வெல்லையில் வியத்த
நிகழ்த்தவி யத்தமென் பனவாய்க்
கோதிலக் கரமவ் வியத்தமே தமத்தாங்
கூறுபா டவைபொரு மூன்று
யோதிய குணங்க ளெனுமொரு மூன்றிற்
குறையுளா மெனும்பகு திபவாய். (உ)

870 தூலமா யணுவாய் வியத்தமவ் வியத்த
மெனத்தொடர் புடையவாய்த் தோன்றுங்
கோலமீ தெனவே குறிப்பதற் கரிதாங்
குறியவா யாதியென் பனவாங்
காலமூன் றினொடும் பழகியே நறுமென்
கமலநா யகனிலீ லைக்கு
மூலமா யவனை முதன்மையா யுடைய
முதன்மைசான் முறைபயின் றுளவே. (ங)

இரண்டுந் தொடர்.

---

[பி-ம்.] [1]அண்டகோசவுற்பத்திச். சா.

871 அக்கா மெனமுற் படக்குறித் ததுதா
னழிவிலா முற்குணத் திணுக்குத்
தக்கதோ ருறையு ளாமெனு மிடையிற்
சாற்றுமவ் வியத்தமென் பதனை
மிக்கா சதத்திற் கிடமெனு மிருதி
மேவிய தமத்தெனு மதனை
யெக்கலை களுந்தா மதகுணத் திணுக்கென்
றியைந்துள நிலைக்கள மெனுமே. (௪)

872 [1]இத்திறத் தினவாய் முடிவிலாப் பெரும்பா
ழெனவுமாய்ப் பாழிலா தனவா
முத்திற மவற்று ளலகிலா தணுவாய்
முழுதமோர் சுடர்மய மெனலாய்
நித்தமென் பனவாய் ஞானதீப் பிலவாய்
நின்றியங் கியதனு விழந்த
வுத்தம வுயிர்க ளுண்டிலை யெனவே
யுறையுளொன் றுருமக் காமே. (௫)

வேறு.

873 ஒன்றாய்ப் பலவாய்த் திரிவிதகா
ரணனு கியுமன் னுயிர்க்குயிராய்
நின்று னெனுமத் திருமகள்கோ
னினைவாற் புகுந்து நிலைகலக்கு
மன்று தாவிற் கிளைத்ததுசூழ்ந்
தகன்றுழ்ந் துயர்ந்த பெரும்பாழிற்
குன்று தமர்முக் குணங்களுமொன்
றினுக்கொன் றடங்காக் குறிபொடுமே. (௬)

874 நல்லாய் புருட னுடனமைந்து
நனிமாண் பொருளிற் பொதிந்ததெனச்
சொல்லாற் றுணிந்த பிரகிருதி
தனின்முக் குணத்திற் றேன்றியதாம்

---

[மூ-ம்.] [1]இத்திறத்தன. சா.

பல்லா யிரகோ டிகளாகப்
பகுத்தற் குரிய பகிரண்ட
மெல்லா முயிர்க்கு முதற்றனிவித்
தெனலா மகானென் பதுமன்றே. (எ)

875 மூன்றாய்க் கிளைத்த குணத்துடனே
மும்மைப் படுமவ் வியத்தமதாற்
றோன்று மறைக்கத் தகுவதுவாய்த்
தொடர்புற் றுதித்த மூதியமகா
னின்று வரிக்கப் படுபொருள்யா
தெனிலெவ் வுயிரு மெப்பொருளுஞ்
சான்றாண் மையதன் விருத்திகளாற்
றழைநா ரணன்சால் புணராதே. (அ)

876 இன்னு தனவாம் யானெனதென்
றிருமாந் துரைக்கு மருட்கையொடு
மன்னு வுலகத் தமைவாழ்வை
மதியார் தமையு மதியாதே
நன்னு வலர்தேர் கல்விகவி
நவினீ ணிதியிற் பிறப்பினுக்கு
முன்னு மெனக்கார் நிகரெனச்சொன்
மூடப் பெருக்காங் காரமதே. (கூ)

இரண்டுந் தொடர்.

வேறு.

877 சாத்துவிக ராசததா மதமெனமூன்
றாகியவத் தனியாங் கார
மேத்தருந்தை சதமுடன்வை காரிகம்பூ
தாதியவா மிவற்றுண் மைந்தா
மூத்ததன்கண் ணிருவகைத்தா மிந்திரியம்
மனமுதலா மூன்றூந் தோற்றம்
வாய்த்தனபூ தாதியிலாய் வதற்கரிய
தெனுஞ்சத்தம் வாய்ந்த மாதோ. (கO)

878 நால்வகைத்தா கியவாக்கு மைம்பத்தோ
ரக்காமு நவைதீர் முந்து
நூல்வகையு மெழுகோடி மந்திரமு
மேழிசையு நண்ணி தாய
சால்புடைமன் னுயிர்களுக்குத் தனுகரண
புவனமும்போ கமுந்தண் டாமைக்
கால்பரந்து விளைக்குமுதற் காரணமென்
பாரதனைக் கற்று ளாரே. (கக)

879 சத்ததன்மாத் திரையினிலா காசமுறப்
பரிசமுதல் சாற்று நான்கில்
வைத்தமுறை பெறுவனவா யேனையவு
முறைமுறையே வந்த யாவும்
வித்தகனு மலர்மகள்கோன் றிருவருளாற்
சனித்தனவவ் வியத்த மெல்லா
முத்தமரா மந்தாமத் துளாாய
நித்தர்பொறிக் குணர்வ தாமே. (கஉ)

880 சாற்றியவை காரிகர்த்தை சதமுடன்பூ
தாதியெனச் சால்பி னோங்கித்
தோற்றமுறு மவற்றுடனின் றிவற்றைவளர்த்
திடுமெனவுஞ் சொல்வ துண்டாற்
போற்றியவைம் புலன்பூதம் பொறிகருமேந்
திரியமனம் புத்தி சித்த
மாற்றரிய வாங்கா மிவையுயிரின்
றத்துவமாய் மதிப்ப தாமே. (கந)

வேறு.

881 அந்த ரந்தனை யாதிய வைந்தினுட் புலனும்
வந்த தோன்றுதொட் டைந்திறு வாயோ வரிப்பு
மூந்த மாயையா வரிப்பபோன் முதலகத் தடக்குா
தொந்த மேயது வாவாத் தடித்தன தொடர்ந்தே. (கச)

வேறு.

882 பூமிநாற் கோணமென்னப் புனன்முழு மதியின் பாதி
யாமன லதுமுக் கோண மறுகோணம் வட்டங் கால்விண்
காமரு பொன்மை வெண்மை கவின்பெறு செம்மை நீலந்
தூமமாம் வடிவி னோடு சொல்லுவ நிறங்க டாமே, (கரு)

883 ஊத்துடன் றரிக்கும் பூமி யுறுபுனல் கலந்து நின்றே
வாத்துடன் பதமே செய்யும் வன்னிசுட் டொன்று விக்கும்
பாத்திடே திரட்டும் வாயுப் பரந்தவா காச மென்றுந்
திரத்தவாய் நிறைந்து நிற்குந் தெள்ளியோ யிடங்கொ டுத்தே. ()

வேறு.

884 அண்ட வுற்பன மிவைசலர் திறைவனு லாகி
மண்டு கெற்பவான் புனலிடைக் கிடந்தது மதிசால்
புண்ட ரீகனும் புரிசடைப் புதல்வனும் வியந்துட்
கொண்ட காரணன் மாயையை யாதெனக் குறிப்பாம். (கஎ)

885 ஆவ தாயபின் போகதா னங்களா யளவற்
றேய்வ தாகிய வணுக்களுக் கீரெழு புவியுந்
தேவ ராதியென் றமைந்தபல் பிண்டமுந் திருட்டித்
தேவ நான்முகத் தொருவனைப் பயந்தன னிறையோன். (கஅ)

886 முடிந்த கோந்தளச் சிகையொடு முகமொர்நான் கினொடும்
வடிந்த குண்டலக் குழைகளு மிரண்டொடு மார்பிற்
படிந்த முப்புரி நூலொடும் படரிருட் படலங்
கடிந்த வாடகாம் பரந்திகழ் கடிதடத் தினொடும். (ககூ)

887 உலகம் யாவையுந் துதித்திட வோங்குநாற் காத்தில்
வலது பாணியோ டிடதுபா ணியிற்செப வடமு
நிலவு நீர்க்கமண் டலத்தொடு முந்தியி னிரைத்தே
யிலகு நீடிரு காத்தொடு மிருபதத் தினொடும். (உ0)

888 பயந்த பொன்னிறத் தொருவன திருசெவி பயில்வான்
வியந்த வாந்திரு வெட்டெழுத் தையுமிளம் பினனு
நயந்த நான்மறைப் பனுவலு மனக்கொள நவின்றே
யுயர்ந்த பேருல கினத்தையும் படைத்தியென் றுரைத்தான். ()

இவை மூன்றுந் தொடர்.

## மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1932-ம் ௵ ஜூன்மாத வரவு செலவு கணக்கு.

| விவரம். | வரவு 1932 ஜூன் | | | வரவு 1931 ஜூன் | | | விவரம். | செலவு 1932 ஜூன் | | | செலவு 1931 ஜூன் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| I GENERAL SECTION: | | | | | | | I GENERAL SECTION: | | | | | | |
| (1) மாதச்சந்தா வகையில் வரவு ... | 50 | ... | ... | | | | (1) சங்கம் மானேஜ்மெண்டாபீஸ் சிப்பந்திகளுக்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 110 | 5 | 2 | | | |
| (2) சங்கக்காலிவிடத்துக்கு மாத வாடகை வரவு ... | 28 | ... | ... | | | | (2) சங்கக்கலாசாலை உபாத்தியாயர்களுக்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 127 | ... | ... | | | |
| (3) Miscellaneous வரவு ... | 1 | ... | ... | | | | (3) Stationery contingencies வகையிற்செலவு ... | 4 | 13 | 6 | | | |
| | | | | | | | (4) சங்கமாபீசு சில்லறைவேலைகள் சம்பந்தமாக அச்சுக்கூலி பைண்டிங்கூலி வகையிற் செலவு. | 12 | 8 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 79 | ... | ... | 1112 | 14 | 9 | மொத்தம் ரூ ... | 254 | 10 | 8 | 264 | 10 | 10 |

## II Editorial Section:

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) சங்கத்தின் அங்கத்தினர்களிடமிருந்து சந்தா வகையில் வரவு ... | 18 | ... | ... | | | |
| (2) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் விற்றவகையில் வரவு ... | 72 | 6 | ... | | | |
| (3) செந்தமிழ்ப் பழைய பிரதிகள் விற்றவகையில் வரவு... | 1 | 1 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 91 | 7 | ... | 480 | ... | ... |

## II Editorial Section:

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) ஷை ஆபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 35 | ... | ... | | | |
| (2) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் அச்சிடும் சம்பந்தமாக ஸ்டேஷனெரி கண்டின்ஜன்ஸி வகையிற் செலவு. ... | 4 | 6 | 6 | | | |
| (3) ஷை சம்பந்தமாக அச்சுக்கூலி, பைண்டிங்கூலி வகையிற் செலவு. ... | 166 | ... | ... | | | |
| (4) தபால், தந்திவகையிற் செலவு. ... | 14 | ... | ... | | | |
| மொத்தம் ரூ ... | 219 | 6 | 6 | 105 | 5 | ... |

| III Press Section: | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) அச்சுக்கூலி வகையில் வரவு ... | 180 | 15 | ... | | | |
| (2) ஷை அச்சுவேலைகட்காக வாங்கிய காகிதங்கட்குக் கிரையம் வரவு ... | 3 | 7 | ... | | | |
| (3) பைண்டிங்கூலி வகையில் வரவு ... | 75 | 2 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 259 | 8 | ... | 120 | 9 | ... |

| III Press Section: | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) அச்சாபீஸ்சிப்பந்திகளுக்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 92 | 7 | 7 | | | |
| (2) ஷை ஆபீஸ் Stationery Contingencies வகையிற் செலவு. | 14 | 7 | ... | | | |
| (3) பைண்டிங் ஆபீஸ் சிப்பந்திகளுக்குச் சம்பளம் செல்லாக்கியது | 33 | ... | ... | | | |
| (4) ஷை ஆபீஸ் Stationery Contingencies வகையிற் செலவு | 14 | 8 | 3 | | | |
| மொத்தம் ரூ ... | 154 | 6 | 10 | 180 | 2 | 8 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆகமொத்தம் வரவு ரூ ... | 429 | 15 | ... | 1713 | 7 | 9 |
| மாத ஆரம்பத்திலிருந்த கையிருப்புத்தொகை ரூ ... | 16593 | 7 | 5 | 12665 | 9 | 4 |
| ஆகமொத்தம் ரூ ... | 17023 | 6 | 5 | 14379 | 1 | 1 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆக மொத்தம் செலவு ரூ ... | 628 | 8 | ... | 550 | 2 | 6 |
| மாத முடிவில் மீதி இருப்புத் தொகை ரூ ... | *16394 | 14 | 5 | 13828 | 14 | 7 |
| ஆகமொத்தம் ரூ ... | 17023 | 6 | 5 | 14379 | 1 | 1 |

*By M. U. C. C. S. Pass Book Rs. 5000- 0- 0

**M. R. C. C. Bank Pass Book** Rs. 11144- 6- 7

Cash on hand Rs. 250- 7-10

16394-14- 5

*Audited and found correct,*

V. S. RAMASWAMI,

AUDITOR,

10—8—32.

LAKSHMINARAYANAN,

*Manager,*

MADURA TAMIL SANGAM.

5—7—1932.

# மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1932-ம்௵ ஜுலைமாத வரவு செலவு கணக்கு.

| விவரம் | வரவு 1932 ஜுலை | | | வரவு 1931 ஜுலை | | |
|---|---|---|---|---|---|---|
| I General Section : | | | | | | |
| (1) மாதச்சந்தாவகையில் வரவு... | 50 | ... | ... | | | |
| (2) பாங்கில் போடப்பட்டுள்ள தொகைக்கு வட்டிவகையில் வரவு ... | 99 | 11 | 7 | | | |
| (3) சங்கக்காலியிடத்துக்கு மாத வாடகைவரவு ... | 28 | ... | ... | | | |
| மொத்தம் ரூ ... | 177 | 11 | 7 | 1248 | 13 | 5 |

| விவரம் | செலவு 1932 ஜுலை | | | செலவு 1931 ஜுலை | | |
|---|---|---|---|---|---|---|
| I General Section : | | | | | | |
| (1) சங்கம்மானேஜ்மெண்டாபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 100 | ... | ... | | | |
| (2) சங்கக்கலாசாலை உபாத்தியாயர்கட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 127 | ... | ... | | | |
| (3) சங்கக்கலாசாலை மாணவர்களுக்குப் போஷணைக்காகச் செல்லாக்கியது. ... | 107 | 5 | 4 | | | |
| (4) Stationery, contingencies வகையிற் செலவு ... | 2 | 1 | 6 | | | |
| (5) பாண்டியன் புத்தகசாலை உபயோகத்துக்கு வரும் பத்திரிகைக்குச் சந்தாசெல்லாக்கியது. ... | 7 | 2 | ... | | | |

| | ரூ. | அ. | பை. | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|---|---|
| II EDITORIAL SECTION : | | | | | | |
| (1) 'செந்தமிழ்'ப் பத்திரிகைக்குச்சந்தாவகையில்வரவு ... | 12 | ... | ... | | | |
| (2) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் விற்றவகையில் வரவு ... | 240 | 1 | 9 | | | |
| (3) செந்தமிழ்ப் பழையபிரதிகள் விற்றவகையில் வரவு. ... | 11 | 8 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 263 | 9 | 9 | 282 | ... | ... |

| | ரூ. | அ. | பை. | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|---|---|
| (6) தபால், தந்திவகையிற்செலவு | 4 | ... | ... | | | |
| மொத்தம் ரூ | 347 | 8 | 10 | 1473 | 4 | 2 |
| II EDITORIAL SECTION: | | | | | | |
| (1) ஷை ஆபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 35 | ... | ... | | | |
| (2) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் அச்சிடும் சம்பந்தமாக ஸ்டேஷனெரி கண்டின்ஜன்ஸி வகையிற் செலவு. ... | 3 | 11 | 6 | | | |
| (3) ஷை சம்பந்தமாக அச்சுக்கூலி பைண்டிங்கூலி வகையிற் செலவு ... | 124 | ... | ... | | | |
| (4) தபால் தந்திவகையிற்செலவு | 14 | ... | ... | | | |
| மொத்தம் ரூ ... | 176 | 11 | 6 | 384 | 7 | ... |

| III PRESS SECTION : | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) அச்சுக்கூலிவகையில் வரவு. | 110 | 5 | ... | | | |
| (2) ஷை அச்சுவேலைகட்காக வாங்கிய காகிதங்கட்குக் கிரயம் வரவு ... | 1 | 1 | ... | | | |
| (3) பைண்டிங் கூலிவகையில் வரவு ... | 42 | 14 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 154 | 4 | ... | 351 | 2 | ... |

| III PRESS SECTION : | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) அச்சாபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்வாக்கியது ... | 105 | 5 | 7 | | | |
| (2) ஷை ஆபீஸிற்கு லெட்டெகள் வார்த்தவகையிற் செலவு ... | 3 | ... | ... | | | |
| (3) ஷை ஆபீஸ் Stationery contingencies வகையிற் செலவு. | 12 | 11 | 3 | | | |
| (4) பைண்டிங் ஆபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது .. | 30 | 14 | 8 | | | |
| (5) ஷை ஆபீஸ் Stationery Contingencies வகையிற் செலவு. | 2 | 14 | ... | | | |
| மொத்தம் ரூ. ... | 154 | 13 | 6 | 165 | 11 | 2 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆகமொத்தம் வரவு ரூ. ... | 595 | 9 | 4 | 1881 | 15 | 5 |
| மாத ஆரம்பத்திலிருந்த கையிருப்புத்தொகை ரூ. ... | 16394 | 14 | 5 | 13828 | 14 | 7 |
| ஆகமொத்தம் ரூ. ... | 16990 | 7 | 9 | 15710 | 14 | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆக மொத்தம் செலவு ரூ. | 679 | 1 | 10 | 2023 | 6 | 4 |
| மாதமுடிவில் மீதியிருப்புத் தொகை ரூ ... | *16311 | 5 | 11 | 13687 | 7 | 8 |
| ஆக மொத்தம் ரூ ... | 16990 | 7 | 9 | 15710 | 14 | ... |

*By M. U. C. C. S.
Pass Bk. Rs. 5000- 0- 0
M.R.C.C. Bank
Pass Bk. Rs. 10944- 2- 2
Cash on hand Rs. 367- 3- 9

16311- 5-11

*Audited and found correct.*

V. S. RAMASWAMI,

AUDITOR.

10—8—1932.

LAKSHMINARAYANAN,

*Manager*,

MADURA TAMIL SANGAM.

5—8—1932.

## மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் விற்கப்பெறும் புத்தகங்கள்.

### சங்கப்பிரசுரம்.

| எண் | புத்தகம் | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஞானாமிர்த மூலமும் உரையும் ... ... | 1 | 0 | 0 |
| 2. | சைவமஞ்சரி ... ... ... | 1 | 8 | 0 |
| 3. | யாப்பணியிலக்கணங்கள் ... ... ... | 0 | 10 | 0 |
| 4. | வைத்தியசாரசங்கிரகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 5. | பன்னூற்றிரட்டு ... ... ... | 3 | 0 | 0 |
| 6. | மகாபாரதம் அரும்பதவுரையுடன் ... ... | 4 | 0 | 0 |
| *8. | தமிழ்ச்சொல்லகராதி உயிர்வருக்கம் முடிய. முதற்பாகம். | 6 | 0 | 0 |
| | ஷை இரண்டாம்பாகம் ... ... ... | 4 | 8 | 0 |
| | ஷை மூன்றாம்பாகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 10. | தொல்காப்பியம் செய்யுளியல் (நச். உரை முதலிய) ... | 1 | 12 | 0 |
| 11. | திருவருணைக்கலம்பகம் ... ... ... | 0 | 6 | 0 |
| 12. | அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் ... ... | 0 | 8 | 0 |
| 13.* | கலைசைச்சிலேடைவெண்பா ... ... ... | 0 | 5 | 0 |
| 14. | தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி ... | 1 | 4 | 0 |
| 15. | திருவாரூர் நான்மணிமாலை ... ... ... | 0 | 4 | 0 |
| | பன்னூற்றிரட்டு (செலக்ஷன்) ... ... | 0 | 4 | 0 |
| | திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம் முதலியன ... | 0 | 1 | 0 |

### செந்தமிழ்ப்பிரசுரம்.

| எண் | புத்தகம் | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| *1. | ஐந்திணையைம்பது உரையுடன் ... ... | 0 | 3 | 0 |
| 2. | கணநூல் (5) இனியநாற்பது (உரையுடன்) ... | 0 | 3 | 0 |
| 4. | புலவராற்றுப்படை ... ... ... | 0 | 3 | 0 |
| 6. | நேமிநாதம் (உரையுடன்) ... ... ... | 0 | 12 | 0 |
| *7. | திருநூற்றந்தாதி (உரையுடன்) ... ... | | | |
| 8. | திணைமாலைநூற்றைம்பது (உரையுடன்) .. | 0 | 8 | 0 |
| *9. | அநுமானவிளக்கம் ... ... ... | | | |
| 10. | அட்டாங்கயோகக்குறள் ... ... ... | 0 | 2 | 0 |
| 12.* | பன்னிருபாட்டியல் ... ... ... | | | |
| 13. | நான்மணிக்கடிகை (பழைய உரை) ... | 0 | 4 | 0 |
| 14. | மூத்தொள்ளாயிரச்செய்யுட்கள் ... ... | 0 | 2 | 0 |
| 15. | திருச்செந்திற்கலம்பகம் ... ... ... | 0 | 3 | 0 |
| 16. | திருவாரூருலா ... ... ... | 0 | 8 | 0 |
| ·17. | சுகசந்தர்சன தீபிகை ... ... ... | 0 | 12 | 0 |
| 18. | இயற்கைப்பொருட்பாடம்... ... ... | 0 | 4 | 0 |
| 19. | தேவையுலா ... ... ... ... | 0 | 3 | 0 |
| 20. | நரிவிருத்தம் ... ... ... ... | 0 | 2 | 0 |
| 21. | சிதம்பரப்பாட்டியல் (உரையுடன்) ... ... | 0 | 8 | 0 |
| 22.* | திருக்கலம்பகம் (ஷை) ... | | | |
| 24. | குருமொழிவினாவிடை ... ... ... | 0 | 1 | 0 |
| 25. | கேசவப்பெருமாள் இரட்டைமணிமாலை... ... | 0 | 2 | 0 |
| 26. | திருத்தணிகைத்திருவிருத்தம் ... ... | 0 | 1 | 0 |
| 27. | மதுரைத்திருப்பணிமாலை... ... ... | 0 | 8 | 0 |
| 28.* | சந்திராலோகம் ... ... ... | | | |
| 29.* | சோழவம்சசரித்திரச்சுருக்கம் ... ... | 1 | 0 | 0 |
| 30. | ஞானாமிர்தக்கட்டளை ... ... ... | 0 | 3 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| 31. | பாண்டியம் ... ... ... ... | 0 | 4 | 0 |
| 32. | மநீஷாபஞ்சகம் ... ... ... | 0 | 8 | 0 |
| 33. | வேளிர்வரலாறு ... ... ... | 0 | 8 | 0 |
| 34. | அகப்பொருள்விளக்கம் ... ... ... | 1 | 4 | 0 |
| 35. | உவமானசங்கிரகம் ... ... ... | 0 | 1 | 0 |
| 37. | மாறனலங்காரம் மூலமும் உரையும் ... ... | 4 | 8 | 0 |
| 38. | திருப்புல்லாணிமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 39.* | பழமொழி மூலமும் பழையவுரையும் (முதல் 100 செய்) | 1 | 0 | 0 |
| 40. | திருமாலிருஞ்சோலைமலை அழகர்பிள்ளைத்தமிழ் ... | 0 | 8 | 0 |
| 41. | பொருட்டொகைநிகண்டு ... ... ... | 0 | 6 | 0 |
| 42. | அகராதிநிகண்டு ... ... ... | 0 | 12 | 0 |
| 43. | மேகவிடுதூது ... ... ... | 0 | 2 | 0 |
| 44. | திருக்குற்றாலமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 45. | தண்டலையார்சதகம் ... ... ... | 0 | 4 | 0 |
| 46. | இராமோதர்தம் ... ... ... | 0 | 3 | 0 |
| 47. | பழமொழிமூலமும் பழைய உரையும் (2-வது 100செய்) | 1 | 0 | 0 |
| 48. | சேதுநாடும் தமிழும் ... ... ... | 0 | 6 | 0 |
| 49. | கடைவள்ளலார்காலம் ... ... ... | 0 | 6 | 0 |
| 50. | தமிழரும் ஆந்திரரும் ... ... ... | 0 | 4 | 0 |
| 51. | மதங்கசூளாமணி ... ... ... | 1 | 0 | 0 |
| 52. | கூடற்புராணம் ... ... ... | 0 | 10 | 0 |
| 53. | திருவள்ளுவர் ... ... ... | 0 | 6 | 0 |
| | ஷை ஆங்கிலத்தில் ... ... ... | 0 | 6 | 0 |
| 54. | அரும்பொருள்விளக்க நிகண்டு ... | 1 | 4 | 0 |
| 55. | மாறனகப்பொருளும் திருப்பதிக்கோவையும் ... | 0 | 12 | 0 |
| 56. | பாட்டியல்நூல் ... ... ... | 0 | 10 | 0 |
| 57. | மதுரைமும்மணிக்கோவை ... ... ... | 0 | 5 | 0 |
| 58. | பழனிப் பிள்ளைத்தமிழ் ... ... ... | 0 | 3 | 0 |

மேலேகண்ட, சங்கப்பதிப்பில்லாத புத்தகங்கள் வேண்டுவோர் வேறு புத்தகசாலைகளுக்குத் தாங்களே நேரில் எழுதிப்பெற்றுக்கொள்ளவேண்டும்.

* இவ்வடையாளமிடப்பட்டவை இப்போது கைவசமில்லை,

குறிப்பு:—1. சங்கத்தினின்று மாதமொருமுறை அரிய பெரிய விஷயங்களைக்கொண்டு வெளியாகிவரும் "செந்தமிழ்"ப் பத்திரிகைக்கு வருஷச்சந்தா ரூ 4. தனிப்பிரதியின் கிரயம் அணா 8. வெளிநாடுகளுக்கு வருஷச்சந்தா ரூ 4—8—0. இதுவரை 29 தொகுதிகள் பூர்த்தியாயிருக்கின்றன. இவற்றுள் 1, 2, 3, 7, 8, 9, 10, 16-ம் தொகுதிகள் கைவசமில்லை. பைண்டு செய்யப்பெறாததொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—0—0-வீதமும், பைண்டு செய்யப்பெற்ற தொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—12—0 வீதமும் விற்கப்பெறும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

2. சங்கப்பிரசுரம், செந்தமிழ்ப்பிரசுரம், செந்தமிழ் முழுத்தொகுதி— இவற்றுள் ஒவ்வொருபுத்தகத்திலும் ஒரேதடவையில் 10 பிரதிகளும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு மொத்தக்கிரயத்தொகையில் 100க்கு 10 வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

லக்ஷ்மீநாராயணையர், மானேஜர்.

உ
கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்
ஒரு தமிழ்ப் பத்திரிகை.

"எனைத்தானும் நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.

தொகுதி-௩௰] ஆங்கிரஸஹு ஐப்பசிமீ [பகுதி-௧௨.
Vol. XXX. October-November-1932. No. 12.

உள்ளுறை.



பத்திராசிரியர்—திரு. நாராயணையங்கார்.

வருஷம் ஒன்றுக்கு ரூ 4.] [தனிப்பிரதி அணா—8.
வெளிநாடுகளுக்கு ரூ 4—8—0.
1932.

Printed by Srimathu RAJA M. DINAKARA BAHADUR AVL., and
published by THIRU. NARAYANA IYENGAR, at the
Tamil Sangam Power Press, No. 54, New Jail Road Madura.

உ

# ஒரு வேண்டுகோள்.

---

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதமொருமுறை வெளிவரும் இச்செந்தமிழ்ப்பத்திரிகையில் வெளியிடுமாறு பொருளுரைகளும், மதிப்புரைவேண்டிப் புத்தகம் முதலியனவும் அனுப்புவோர் அவற்றைப் பத்திராதிபர், செந்தமிழ், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும்,

செந்தமிழில் வெளியிடுமாறு அனுப்பும் விளம்பரங்களையும் பாண்டியன்புத்தகசாலைக்கு நன்கொடையாக அனுப்பும் புத்தகம் முதலியவைகளையும், செந்தமிழ் செந்தமிழ்ப்பிரசுரங்கள் தமிழ்ச்சங்கப் பிரசுரங்கள் சங்கக்கலாசாலை சங்கப்பரீக்ஷைகள் முதலியவைசம்பந்தமாக அனுப்பும் கடிதங்கள் மணியார்டர்கள் முதலியவற்றையும், இன்னும் இச்சங்கசம்பந்தமாயறியவிரும்பியெழுதும் பிறவற்றையும் மானேஜர், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும் அனுப்புமாறு இதன்மூலம் கேட்டுக்கொள்ளலாயிற்று.

மதுரைத்தமிழ்ச்சங்கம்,<br>
மதுரை.

லக்ஷ்மீநாராயணையர்,<br>
மானேஜர்.

---

## "செந்தமிழ்" நேயர்களுக்கு வேண்டுகோள்.

இம் மதுரைத்தமிழ்ச்சங்கத்தாரால், சென்ற முப்பதுவருடகாலமாகத் தமிழ்மொழியின் வளர்ச்சிகருதி மாத மொருமுறை வெளியிடப்பெற்றுவரும் இச்"சேந்தமிழ்"ப்பத்திரிகையானது, பல பண்டிதர்களாலும் எழுதிவரப்பெறும் அரியவிஷயங்களை எளிதில் எல்லோருமுணர வெளியிடும்பெருமைவாய்ந்ததென்பது யாவரும் அறிந்ததே. அது, செந்தமிழ்நேயர்களின் அபிமானத்தையும், பண்டிதர்களின் ஆதரவையுங் கொண்டே இப்பகுதியோடு முப்பதாந்தொகுதி முற்றுப்பெற்றிருக்கிறது. இனி, முப்பத்தோராந்தொகுதி தொடங்கப்பெற்று அதன் முதற்பகுதி கூடியசீக்கிரம் வெளிவரும். அப்பகுதி வழக்கப்படி அங்கத்தினர்களுக்கும், செந்தமிழ்ச் சந்தாதார்களுக்கும் அத்தொகுதியின் வருஷச்சந்தாவுக்கு வி. பி. யில் அனுப்பப்பெறும். செந்தமிழபிமானிகள் வி. பி. யை அன்புடன்பெற்றுப் பத்திரிகையை ஆதரித்துவருவதோடு தங்கள் நண்பர்களையும் பத்திரிகையைத் தருவித்துப் படித்துவரும்படி தூண்டவும், பண்டிதர்கள் சிறந்த விஷயதானமளித்துச் செந்தமிழைச் சிறப்பித்துவரவும் வேண்டிக்கொள்ளப்பெறுகிறார்கள்.

*N. B.*–முப்பத்தோராந்தொகுதிச் சந்தாத்தொகையை மணியார்டர் மூலம் அனுப்பிப் பத்திரிகையைப் பெற்றுக்கொள்ளவிரும்புவோர் அவ்விவரத்தை உரியகாலத்தில் அடியிற் கையொப்பமிட்டிருப்பவர்க்குத் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்ளலாயிற்று. இங்ஙனம் தெரிவிப்பதனால், அநாவசியமான வி. பி. செலவு சங்கத்துக்கு ஏற்படாது.

லக்ஷ்மீநாராயணையர்,

மானேஜர்.

